# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் உச | திருவள்ளுவர் ஆண்டு ககளக சருவதாரி—வைகாசி 1948—மே | மலர் உ |
|---|---|---|


## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

## செந்தமிழ்ச் செல்வர்களுக்கு ஒரு வேண்டுகோள்

---

நம் சங்கச் சார்பாக ஒரு விரிவான விண்ணப்பம் வெளியிட்டுள்ளோம். செந்தமிழ்ப் பெருமக்கள் அதனைப் படித் தின்புறுவார்க ளென எதிர்பார்க்கிறோம்.

சங்கத் தொண்டுகள் சிறப்பாக நிறைவுறுதற்கு முதற் றுணை பொருள் என்பது அன்பர்கள் அறிவர். இப் பொருளுதவி வேண்டி நம் சங்கத் தொண்டர்கள் தமிழ்ப் பெரு மக்களிடம் நெருங்கி விண்ணப்பம் செய்து கொள்கின்றனர். இம் முறையில் அணித்தில் சங்க அன்பர்கள் நாகப்பட்டினம் தமிழ்ப் பெருமகனார் திருவாளர் V. P. K. காயாரோகணம் பிள்ளை அவர்களை அணுகிய போது, அவர்கள், பெருந் தொகை உதவி,

'தம் உடல் பொருள் ஆவியும் தந்து, உண்மைத் தமிழ் மகன் தமிழவேள் திரு. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டு, போற்றிய தமிழ்ச் சங்கம் கைவிடப்படுபவோ? ஒரு ஐயாயிரம் பேரேனும் தலைக்கு நூறு ரூபா கொடுத்தால் ஐந்திலக்கம் சேர்ந்துவிடுமே. இத் தொகையோர் தஞ்சை மாவட்டத்திலும் இல்லையா? இந்த நெறியில் நாமெல்லாம் முயன்று, தமிழவேள் அவர்கள் நாட்டிய நிலையங்கள் சிறப்பாக என்றும் விளங்க ஒரு முதற்றொகை சேமிக்கவேண்டும்.

இதற்கு நானும் என்னல் இயன்றமட்டும் துணை
செய்கிறேன்.'

என்று வீரமொழி கூறினர்கள். இதைக் கேட்ட தமிழ்ப் பெருமகனர் திருவாளர் S. R. நாயடு அவர்கள் தம் நண்பரைப் போலவே தாமும் ஆர்வங் கொண்டு, இம் முயற்சியில் தொழிற்படலானர்கள். இவ் விரு தமிழ்த் தொண்டர்களது அருஞ் செயல் எங்கட்குப் பேரூக்கமும் மன உறுதியும் தருகின்றன.

பல்லிலக்கம் பெருமக்களைக் கொண்ட இத் தஞ்சை மாவட்டத்திலேயே நூறு வெண்பொற் காசுகள் கொடுக்கக் கூடிய ஐயாயிரம் பேர்களைக் காணலாமென்பது அன்பர்கள் கருத்து.

திருவாளர் காயாரோகணம் பிள்ளை அவர்களும், திருவாளர் S. R. நாயடு அவர்களும் கூறிய வீரமொழிகளைத் தமிழர்கள் எல்லாரும் கருத்தில் கொண்டு, அவர்கள் காட்டிய வழியைக் கடைப் பிடித்து, அவர்கள் கொண்ட திண்ணிய எண்ணம் எண்ணியாங்கு நிறைவுறத் துணை நின்று முற்றுவிக்கும்படி வேண்டிக்கொள்கின்ருேம்.

க. த. சங்கம், 15—8—1948. } ஆ. யா. அருளானந்தசாமி நாடார், தலைவர்.

## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

# விண்ணப்பம்.

'உலகத்தின் மக்கட் டொகுதி உயர் வடைய வேண்டியும், சான்றோர் பல்க வேண்டியும் செய்துவரும் பலபல வகை யான முயற்சிகளுள், சிற்சில கொள்கைகளையும் நோக்கங்களையும் பொதுவாக வைத்துக்கொண்டு, அவற்றை ஒப்புக்கொள்வார் சிலரோ பலரோ ஒன்றுகூடி நடத்திவரும் கழகங்கள் சிறந்தன வாகும். இக் கொள்கைகளும் நோக்கங்களும் நாட்டிற்கும் காலத் திற்கும் மக்கள் உளப்பாங்கிற்கும் ஏற்றவாறு வெளிப்படை யான பற்பல வேறுபாடுகளை உடையனவாய்த் தோன்றினும், உள்ளீடாக மன்பதையின் உயர்வையும் இன்பப் பெருக்கையுமே கொண்டுள்ளன வாகும். இவ்வாறு தோன்றித் தொண்டாற் றும் கழகங்களாலேயே உலகத்தில் பெரும் நன்மைக் காய மாறு தல்கள் பல தோன்றியுள்ளன என்பதையும், எத்தகைய உயர்விற் கும் மக்கள் உள்ளம் பண்படைதலே அடிப்படையாம் என்ப தையும், அவ்வாறு பண்படைதற்கு அவ்வந் நாட்டில் தோன்றி வழங்கும் மொழிகளே முதன்மையான துணை என்பதையும் நன்குணர்ந்த செந்தமிழ்ப் பெருமகன் வேம்பன். இராதாகிருட் டின பிள்ளை, பி. எ., முதலான உண்மைத் தொண்டர்கள் சிலர் முயற்சியால் விரோதிகிருது, வைகாசி, முதல் நாள் (*14-5-1911*), திருவருளின் துணையும், தமிழ்த்தாயின் தண்ணளியும் கொண்டு நமது சங்கம் தோன்றுவ தாயிற்று. நம் சங்கம் தோன் றிய காலத்துத், தமிழ்மொழியும், அதன்பால் தமிழ் மக்களுக் குள்ள ஆர்வமும் எங்நிலையில் இருந்தன வென்பதையும், தோன்றி முப்பத்தேழாவது ஆண்டு நிரம்பிய இன்று எவ்வாறு உள்ளன என்பதையும், ஒரு சிறிது மேற்பார்வையாகக் காண எண்ணு வார்க்கும், நமது சங்கத்தின் முயற்சிகளால் தமிழ் நாடும் மக்க ளும் அடைந்துள்ள பயன் நன்கு தெரியலாவதோடு, இத் தகைய அருஞ்செயல்களை எவ்வகை ஆரவாரமு மின்றிச் செய்துவரும் எளிமையும் நன்கு புலனுகாமற் போகா. நமது சங்கந் தோன்றிய காலத்துப் பல்கலைக் கழகத்துள் தான் பெற்றுவந்த ஓதுக்கிடமும் இழந்து தமிழ்த்தாய் அலறுவா ளாயினள். தமிழ் நாட்டுப் பிறந்த அறிவுடை மக்கள் பலரும் தமிழகத்தே தமிழ் மக்களால் கூட்டப்பெற்ற கூட்டங்களில் தமிழ் மொழியிலே பேசுவதற்கு

வன்மை யற்ற கோழைகளாய்த் திகழ்ந்தனர். அக் கோழைகளின் நிலையைக் குறிக் கோளாகக் கொண்ட மக்கட் கூட்டமும் தாய் மொழியைப் புறக்கணிப்பதில் அவர்களையே பின்பற்றுவ தாயிற்று. ஆங்காங்கு சிற்சிலராய்க் கூடித், தமிழ்க் கலை மல்க விரும்பிய பெரியோரும், தமிழ்மொழி தனித் தியங்கும் ஆற்ற லுடைய தென்னும் உண்மையை உளங்கொளாது, உழப்பாராயினர். சங்கம் தோன்றிய காலத்து இத் தன்மைத்தாக, இதுபோது யாம் எண்ணிய சிறப்பு ஏறத்தாழ முற்றிய தெனச் சொல்லலாம்.

நம் சங்கம் ஓராண்டு நிறைவதன் முன், வாழை யிளங் குருத் தென வளர்ச்சி எய்தித், தக்கார் தலைமையிற் கூடித், தமிழ் மொழிக்கு ஆக்க மிகும் பல விரிவுரைகளை நிகழ்த்தியது. பின்னர், நல்லார் இனத்ததாய் விளங்கு மிக் கழகம், தமிழ்த் தாயின் தனியரசே தனது நோக்கமாகவும், தமிழ் மக்களின் தவறிலா வாழ்வே தனது இனிய செயலாகவுங் கொண்டு, உலகம் போற்றி மகிழுமாறு உலப்பிலாப் பணி செயும் உண்மை நலன் வேட்கு முயர்குடிப் பிறப்பினர், எம் செந்தமிழ்ப் புரவலர், திருவாளர் தமிழவேள் இராவு சாகிபு தஞ்சை வேம்பன். உமாமகேசுவர வள்ளலைத் தலைமையில் நிறுத்தி, அவர்தம் ஆணைவழியே வளரத் தலைக்கொண்டது. அது முதற்கொண்டு முற்பக்கத்துப் பிறை மதி யென்ன, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக முருகி வளர்ந்து, இற்றை ஞான்று முப்பதோ டேழாண்டுகள் இனிதே நிறைவுறப் பெற்று விளங்குகின்றது.

நிறைந்த முப்பத்தே ழாண்டுகட்கு மேலாகத் தமிழ் வளர்ச்சி கருதி இஃதாற்றிய தொண்டுகள் எண்ணில. தமிழ்த் தாயின் தனிச்சீர்மை தளிர்த் தோங்கவும், தமிழன்னையின் செல்வர்கள் கல்வியும் செல்வமும், பிணியின்மையும் பேரறமுங் கொண்டு, அறிவும் ஆண்மையும் பொருந்தி மல்கவும், பல்லாற்றானு முயன்று வரு மிக் கரந்தைக் கழகம், தன் நோக்கம் நிறை வேறுதற் பொருட்டு, இளஞ்சிறார் பயிலத் தொடக்க, நடுத்தரக் கல்விக்கூடங்கள் கண்டும், புலவர் பெருமக்கள் பல்க ஒரு புலவர் கல்லூரி தோற்றியும், மூதியவர்க்காக ஒரு சிறந்த நூற்குழுமம் நிறுவியும், புலவர் விரும்ப ஒரு பூம் பொழில் வளர்த்தும் வருகின்றது. இனி, நோயுற்றார் பிணி நீங்க ஒரு மருத்துக்கூடந் தோற்றியது. திசையிலாது பசி யுற்று வாடு மிளைஞர் பொருட்டு ஒரு திக்கற்றோரில்லம் அமைத்தும் ஆதரிக்கின்றது. இவையன்றித், திங்கள் தோறும் கூடி, சிறந்த சொற்பெருக்குகள் நிகழ்த்தியும், ஆண்டுகள் தோறும் கூடித் திருவிழா எடுத்தும், ஆன்றோர் தலைமையில்

அறிவு விளக்கந் தரூஉம், தமிழ் நலந் தழுவிய பல அரிய முடிபுகள் செய்தும், புலவர் நாள் போற்றியும், புது நூல்கள் வெளியிட்டும், நாடு மொழியுஞ் சிறக்க இஃதாற்றிய தொண்டுகள் பல. இதுகாறும், நம் தாய்மொழித் தொண்டிற்கு, இச்சங்கம் ஈட்டி நற்பயன் விளைத்திட்ட தொகை இருநூற்றைம்ப தாயிரத்தின் மிக்கதாகும்.

நம் சங்க வுறுப்பினர்களாகவும் அன்பர்களாகவும் உள்ளவர்கள், நம் தமிழ் வழங்கு மாநில மெலா மேவி யுள, குறுநில மன்னர், பெருநிலக்கிழவர், திருவளர்செல்வர், மறுவிலாப் பெரியார்; அருள் நிறை மேலவர், ஆன்ற தொல் சிறப்பினர்; மன்னவைக் குழுவினர், மாபெரும் புலவர்; வணிக நன்மக்கள், வான் பொரு ளீட்டுவார்; கல்வி மாண்புற்ற சொல்நிறை மொழியினர்; சோர்விலா மாணவர், தொல்வழக்கறிஞர், தொகுப்பில் தொழிலினர் ஆய பலநிலையினுஞ் செயலினுந் தொழிற்படும் தமிழ்ப் பொது மக்களே யாவர். இதன் தகுதி யறிந்து அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் பேரவையில் இதற்கு ஓரிடமும் அளித்துள்ளமை ஈண்டுக் கருதற் குரியதாம்.

நமது கரந்தைத் தமிழ்ச் சங்கம் ஆற்றிவந்த பணிகளைப் பொதுப்பட நோக்கின், அவையாவும் மொழியின் முன்னேற்றங் கருதிப் புரிந்தனவாகவே அமையும் என்பது ஒருதலை. 'தாய்மொழி வளர்ச்சியினை உள்ளவாறு முயன்ருல், அதனுல் நாட்டின் பல பிளவுகட்கு ஏது வாகும் சாதி, சமயப் பூசல்களையும் அரசியல் வேற்றுமைகளையும் அறவே நீக்கி, மக்கள் முன்னேற்றத்துக் குரிய பல இனிய முறைகளைக் கொள்ளலாம்' என்ற கொள்கையைத் தனது முதிர்ந்த பல்லாண்டுகளின் பயிற்சியினுல் இஃது அறிந்துளது. தமிழ் மக்கள் உலக முன்னேற்ற மக்களுள் ஒருவராக விரும்பினுல், அவர்கள் பிற மொழிகளுக்கு அடிமைப் படாது, அவர் தம் தாய்மொழியி லுள்ள, பிற மொழிகளில் காண வியலாத கலைச் செல்வங்களை யெலாம் கண்டெனச் சுவைத்து, மகிழ்ந்து, பின்னரே வேற்று மொழி யறிய விழைவது முறைமை, என்ற கருத்தை உறுதியாகப் பற்றிய நம் சங்கம் அதனை நிலை நாட்ட ஆற்றிய தொண்டுகள் மிக மிகப் பலவாம்.

இவ் வுலகில் பெருநிதி படைத்தோரும் பெருநிலை பெற்றவரும் அரிதில் முயன்றும் முடிக்க வியலா ஒரு பெருஞ் செயலை நம் எளிய சங்கம், தன்னல மற்ற தலைவர்களின் துணைபெற்று, மொழி நலங் காணுந் தொண்டர் படைகளின் முயற்சி, உறுதி, ஊக்கம் ஆய கருவிகளால் எளிதில் நிறைவேற்றி வருவது எவரும் அறிந்ததே.

செந்தமிழ்க் குடிமக்கள் சிறிது கருதுவார்களானால், நம் சங்க நோக்கங்களெல்லாம் முற்றுப் பெறுவதற்குப் பலருடைய ஆதரவும், உதவியும், உழைப்பும் வேண்டப்பெறு மென்பது நன்கு விளங்கும்.

நமது தொண்டின் நலம் தமிழ் மக்களனைவரிடத்தும் பரவுவ தென்பதையும், அதன் பயன் தமிழகமும், தமிழ் மக்களும், தமிழ் மொழியும் உள்ள காலம் வரையில் நிலைப்ப தென்பதையும் பன் முறையும் வற்புறுத்திக் கூறுகின்றோம். உற்று நோக்கு வோர்க்கு, இதன் உண்மையும் உறுதியும் விளங்காமற் போகா. நம் அன்பர்கள் எந்த நிலையி லுள்ளவர்களும் எம் விண்ணப்பத் திற்கு உதவி செய்ய வல்லவ ராவார்க ளென்பதையும் தெரிவித் துக் கொள்ளுகிறோம். எம் தொண்டிற்கு உதவி செய்ய வியலாத வர்க ளெனக் கூறக் கூடியவர் உலகில் ஒருவருமே யில்லை யென் பதை உறுதியாகக் கூறலாம். நம் தொண்டு பல திறத்தது; பலர் உதவியையும் வேண்டுவது; பலர்க்கும் பயன் தருவது; நம் நாட்டில் நாம் மக்களாக வாழ வேண்டுமானால், இன்றியமை யாது வேண்டப்படுவது. அரசர்களாக வுள்ளோரும் உதவ லாம்; அடிமைகளாக வுள்ளோரும் உதவலாம்; கல்லாத கலை யொன் றில்லை யெனக் கூறத் தகும் கற்றறி பெரியோரும் உதவ லாம்; கல்வி கற்கப் புகும் இளைஞரும் உதவலாம்; பல்லோரும் தன்னைப் போற்றிப் பின்றொடர நிற்கும் பெரியோரும் உதவ லாம்; இல்லம் ஒன்றன்றி ஏனைய தறியாது வாழ்வோரும் உதவ லாம். எந்நிலையோரும் எவ்வளவிலும் உதவ இடந்தருவது எம் தொண்டு என்பதைப் பன்முறையும் வற்புறுத்துகின்றோம்.

எம் தொண்டுகளின் வகை பல வாகும். எந் நோக்கமும் பொருட் செலவின்றி யியலா வென்பது யாம் கூற வேண்டா. அரசர்களும், மடாதிபதிகளும், பெருநிலக் கிழவர்களும், வணிகர் களும், செல்வர்களும், எம் நோக்கம் ஈடேறத்தக்க பொருளுதவி செய்யக் கேட்டுக்கொள்ளுகிறோம். எமக்கு ஈயும் பொருள், அளவில் எவ்வளவு சுருங்கியதாக விருப்பினும், விளைக்கும் பயனில் மிகப் பெரிய தாகு மென்பதை அறிய வேண்டுகின்றோம். பொதுநிலைக் கழகங்களும், அவற்றின் தலைவர்களும், உறுப்பினர் களும் எமக்கு ஆற்றக்கூடிய நன்மைகள் பல; எம் கல்லூரிக்கு அவர்கள் பொறுப்பில் மாணவர்களை அனுப்பலாம்; எம் வெளி யீடுகளைப் பரவச் செய்யலாம்; இன்னும் பலவகைகளில் உதவ லாம்; அவர்க ளனைவரும் தங்களா லியன்ற உதவியைச் செய்ய வேண்டுகின்றோம். புலவர்களாக வுள்ளோர், எம் பல வெளி

யீடுகளுக்கும் தங்களறிவா னியன்ற உதவியைச் செய்யலாம்; புது நூல்களெழுதலாம்; கட்டுரைகளெழுதலாம்; தங்கள்பா லுள்ள பழைய ஏட்டுச் சுவடிகளை வெளியிடும் வண்ணம் உதவலாம்; தாங்கள் கற்ற அரிய பொருள் பலவற்றையும் எமக்கு உதவித் தமிழன்னைக்குத் தக்க அணிகலன் புனையுமாறு செய்யலாம்; சொற்பொழிவாற்றலாம்; தமிழ்ச்சுவை யறியும் வாய்ப்புப் பெறார்க்குச் சுவை யறிவிக்கலாம்; இவை யனைத்திற்கும் எம நோக்கம் இடம் தருவதாகும்; இவை யனைத்தையும் யாம் இதுபோது வேண்டி நிற்கின்றோம். செல்வம் மிக்கு வாய்க்கப் பெறார் தாம் யாது செய்வதெனும் கவற்சி யடைய வேண்டாம்; தம்மா லியன்றது ஒரு பையே யெனினும், அதனை அன்போடு ஈவார்களாயின், நம் நோக்கம் நிறைவேறிவிட்டது. அந்த ஒரு பையே எமக்குப் பெரும்பை. இரண்டு கோடி மக்களுக்கு மேலுள்ள நம் தமிழன்னைக்கு ஒவ்வொருவரும் ஒரு பை கொடுப்பினும் நூறாயிரம் ரூபா சேர்ந்து விடாதா? இருகோடி மக்களன்பினும், அந் நூறாயிரத்தினும் யாம் பெற வரிய பேறு பிறிதுண்டோ? நம் தமிழகத்தில் இருபதினாயிரம் சிற்றூர் களுக்கு மேலிருக்கின்றன; ஐந்து ரூபா உதவ வியலாத ஊர் ஒன்று உளதென்று இப்போது சொல்ல வியலுமா? ஒவ்வொரு சிற்றூரிலும் முதன்மையாக வுள்ளவர்கள் உளங் கொண்டு சேர்க்க முயன்றால், ஊர் ஒன்றுக்கு ஐந்து ரூபா சேர்ப்பது எளிதாக வியலாதா? அன்பர்கள் இவ்வாறு சேர்க்க முன்வரின் இருபதினாயிரம் சிற்றூர்களிலும் நூறாயிரம் ரூபா சேர்ந்து விடாதா? இரு நூறுக்கு மேற்பட்ட நகரங்கள் நம் நாட்டி லிருக்கின்றன; அவற்றுள், ஒவ்வொரு நகரத்திலும், அந் நகர மக்கள், சிறுகாலையே இன்பம் தந்து பிறகு இடர்ப் படுத்துவதான செயல்களுக்கு விளையாட்டாகச் செலவிடும் தொகை நாள் ஒன்றுக்குக் குறைந்தது ரூபா ஆயிரத்துக்கு மேலாகு மென்பதில் ஐயமில்லை. அத் தொகை பெரும் பகுதியும் நடுத்தர வாழ்க்கை யுடையவர்களாலேயே செலவிடப்படுகின்றது. இவர்களெல் லாம் மனம் கொள்வாராயின், 365 நாட்களில் ஒரு நாள் தாங்கள் வழக்கமாகச் செலவிடும் சில்லரையைத் தமிழ்த் தாய்க்குக் காணிக்கையாகச் செலுத்த வியலாதா? ஒரு வேளை உணவு விடுதியில் தேநீர்க்கோ, காப்பிக்கோ வீசி யெறியும் காசு தமிழன்னையின் திருவடிகளுக்குக் காணிக்கையாக அமைய வொண்ணாதா? இவ்வாறு ஒரு நகரத்தில், ஒரு நாள் அல்லது ஒரு நாழிகை, அன்பர்கள் மனம் கொள்ளின், ஓராயிரம் ரூபா சேர்ந்துவிடாதா? தமிழக நகரங்கள் முன்வரின் இருநூறாயிரம்

ரூபா எளிதிற் சேர வியலுமே. நமது நாட்டில் பல வகையிலும் செலவாகும் பொருளுக்கு எல்லை யில்லை. ஒவ்வொருவரும் தங்கள் வருவாய்க்கும், நிலைமைக்கும் தக்கவாறு எண்ணி, தாங்கள் பலவாகச் செலவிடும் தொகையில், தமிழ்மொழியின் முன்னேற்றத்திற்கும், ஒரு சிறிது செலவு செய்யவேண்டுவதுதான் என்பதை உளங்கொண்டு, எமக்கு உதவவேண்டுகின்ருேம்; பலதுறைகளிலும் செல்லும் தொகைகளில், தமிழ்த் துறையில் செல்லும் தொகை ஒன்று ஆயிரமாக வளர்ந்து ஓங்கி நலம் செய்யுமென்பது திண்ணம். பொறி நுகர்ச்சியிலும், புகழ் வேட்கையினும் ஓடும் பொருள் மிகப் பெரியது. அப் பெருந் தொகையுள் ஒரு சிறிது எம் தொண்டுக்கு உதவின், அதனல் பெறும் நிலைத்த புகழும், நீடித்த இன்பமும் பெரி தென்பதில் ஐய மில்லை. சிறிது சிந்திக்கின் இதன் உண்மை புலனகும், ஒரு கல்லூரியை அமைப்பதினும், ஒரு மாணவனை ஆசிரிய னுக்குவதினும், நாட்டின் ஒரு பகுதியி லுள்ள அறியாமையைத் தொலைத்தலினும் ஒருவர் அடையத் தக்க இன்பமும் புகழு முண்டோ? ஒவ்வொருவரும் சிந்தித்து, எம் விண்ணப்பத்தைச் சீர் தூக்கி, எம் தொண்டினையும் நினைத்துப், பின்னர் தங்கள் உளங்கொண்டதை உதவ வேண்டுமென்பதே யாம் பன்முறையும் வேண்டுவது. எல்லீரும் உதவ வல்லீர். அன்பர்களே! பெரியோர்களே! பெருநிதிச் செல்வச் செல்வர்களே! தலைவர்களே! புலவர்களே! ஏழை மக்களே! இளைஞர்களே! எல்லீரும் வம்மின்! தமிழ்த் தாய்க்கு ஆய தொண்டினைச் செய்ம்மின்! தமிழ்த் தெய்வம் கொலுவீற்றிருந்து, பேரருள் பெருக்கித், தம் மக்களை வாழ்த்தி,வளம்பெறச் செய்யும் புண்ணிய நன்னுள் இது கண்டீர்! சேர வருமின்! நும்மா லியன்றது கரவாது செய்ம்மின்! பொன்மிகப் படைத்தீர்! பொருள் கொடுத் துதவுமின்! புலமை மிக் குடையீர்! அறிவு தந்துதவுமின்! ஆற்றல் மிக் குடையிர்! பரப்புமின் தமிழ் நலம்!'

*15—8—48.*

# பண்ணை கெழு பொருளுவணை.

திரு. த. பு. நவநீதகிருட்டினன், எம். ஏ., அண்ணாமலைநகர்.

(முற்றொடர்ச்சி: துணர் 24, மலர் 1, பக்கம் 32.)

அங்ஙனமாக, மண்ணருந்தின நீரானது அதனூடே ஊறிச் சென்று, அடியிலுள்ள பாறை வயினில் படுகராய்த் தேங்கும். புனலியினுள்ளினின்று நிவந்தெழும் மெல்லிய குழாயினுள் அப் புனலி ஏறலைப் போல, மண்ணின் கீழ்க் கயத்தினின்று நீரானது மண் துகள்களின் நெருக்கத்திடை பொருந்தும் இட்டிகைகளினூடே எழும்புகிறது. கூர விழைப் புரை யியவினை கவர்ச்சியால் வலிக்கப்பட்டு, புனலியென்று ஏறும் உயரத்தினளவானது துளையின் குறுக்களவுடன் மலைத்த வீதத் தகவினை (Inverse proportion) தொடர்பு கொண்டிருப்பது. அஃதாவது, துளை யளவு குறையக் குறைய, உயரத் தளவு முறையே மிகுதி யாகி வருவது. அம் முறையை யொட்டி, மண் துகள்களிடை யான இட்டிகைகளின் இடைத்தகவணி யான குறுக்களவு சிறுகச் சிறுக, அவற்றினூடே நீரேறும் உயரத்தினளவு மிகுதியாகி வரும். ஆகவே, ஒருயரத்தான நிலப்பகுதி யொன் றமைந்த மட்டம் வரை அடியிலுள்ள நீர்நிலையினின்று நீரேறி வரவியலும் அன்றி இயலாது என்பதைப் பொறுத்த தகவு மண் துகள்களின் அளவைப்பாற் பட்டது; ஓரள வான மண் துகள்களினூடே நீரேறி அடையக் கூடிய நிலப் பகுதிகள் எவை யென்பதைப் பொறுத்த தகவு, அவை அடி நீர்நிலையினின்று முறையே, ஏற்றமா யுள்ள உயரங்களின் அளவை யொட்டியிருப்பது. கீழ்க் கயத்தினின்று நிலப்பரப் புள்ள உயரமானது மண் துகள்களிடை யான இட்டிகைகளின் குறுக் களவுக்குப் பொருத்தமான நீரேற் றுயரத்தி னளவைவிட மிக்கதா யிருப்

பின், பரப்புவரை நீர் ஏருது. நிலப் பரப் புள்ள உயரமானது தக்க வளவை விடக் குறைந் துள்ளது எனக் கொள்வோம். அப்போது கீழ்ப் படுகரினின்று மேற் பரப்புக்கு நீர் ஏறும். அங்ஙனம் ஏறிவரும் நீரானது பரப்பினின்று ஆவியா யாகிப் போய்விடும்; மேலும் நீர் ஏறிவரும்; அதுவும் ஆவியாய்ப் போகும். பரப்பினுக்கும் படுகருக்கும் இடையான நிலப் பகுதிகள் நீர்த் தேங்க லுற்றிருப்பன. மேற் பரப்பினின்று ஆவியாய்ச் சென்றவாறு நீரானது நீங்கிக் கொண்டே யுள்ளமையின், அடிப் படுகரி லான நீரி னளவு குறைந்துகொண்டே வரும். இடைப் பகுதிகள் அனைத்தையும் நீரூறினவாறு வைத்திருத்தற்குப் போதுமான வளவுக்குக் கயத்தில் நீ ருள்ளவரை அவ்வாறு நடந்தேறி வருவதாகும்; அதுகாறும் அப் பகுதிகள் நீருண் டிருப்பன. கயத்துநீர் முழுதும் வற்றிப் போதல் என்ற ஒக்கற் கெழு நிலைமை ஏற்பட்டுக் கொண்டிருக்கும் போது, கீழ்ப் பாறையினின்று மேல் அம்போதியாழிக்கு (Atmosphere) இடையறுது நீர் இவர்ந்துகொண் டிருப்பதாகும். மண்கொண்ட நீரானது விரைவாய் வடிந்து கொண் டிருத்தற்கான ஓட்ட வயவைகள் மிகுதியா யில்லாதபோது, நில முள்ள நிலைமையை, நுட்பங்கள் கூறுவாறு, பொதுப்படக் குறித்த விளக்கமே யாகும் நாம் உரைத்தது. அது, களிமண் ணியலான நிலம், மணற் பாங்கானதைவிட மிகுதியான நீ ரடைந்திருத்தற் கான பொருட்டு எதுவாம் என்பதைக் கூறுவது. ஆனல், மழை பெய்துகொண்டுள்ளபோதும், பெரும்பெயல் பொழிந்து ஓய்ந்தவுடனேயும் என்ன நேரிடுவதாம் என்பதை விளக்கவில்லை.

நிலத்தின்மீது மழை பொழியும்போது, அந் நீரானது நிராவணக் கவர்ச்சியால் கீழோச்சு வலிமைக்கு உட்படுகிறது. ஆனல், கூரவிழைப்புரை யியவின் பொருட்டான பரப்பு ஆர்த்திகல் (Surtace Tension) என்றதை யொட்டி மேலேற்று வலிமைக்கு உட்படுகிறது. ஒருவகை மண்ணினூடே அடிமட்டங்களுக்கு நீ ரிறங்கலைப் பாப்பு ஆர்த்திகலானது எதிர்க்

கும் வலிமையி னளவு, அவ் வகை மண்ணின் கோவைத் தாத் தையும் அது வுள்ள மட்டத்திற்கும் அடி நீரூற்று மட்டத் திற்கும் இடையான உயரத் தினளவையும் பொறுத்திருப்பது. அவ் வுயரத்தி னளவே, நிலத்தி லூறின நீர் உறுத்தும் கிரா வண வலிமையை யொட்டிய கீழ்வாட்ட மான நீர் நோன்றுத் தகை யான (Hydrostatic) அழுக்கத்தையும் குறிப்பதாம். புதுப் பெயலினது நீரில் எவ்வளவு வரையானது மண்ணால் அருந்தப் படுவ தாகும் என்பது, அம் மண்ணானது முன்னர்ப் பெய்த மழை நீரால் எது வரை தெகுண்டிருப்பது என்பதையும், அத னின்று அம்போதியாழிக்கு ஆவியாய் மாறிப்போகும் நீரின ளவையும் பொறுத்திருப்பது. பெரும் பெய லடித்து ஓயுக் தருணத்தில் அம்போதியாழி நீராவி யார்ந்திருப்பது. ஆத லால், அந் நிலைமையில் அதற்கு மண்ணினின்று நீராவிப் போக்கு ஏற்படாது. மண்ணின் கழுமலான நீரி னளவைக் காணற் கான கருவி யொன் றுள்ளது. அது, சொற்ப நீ ரூற்றப்பட்டு மூடி யிடப்பட்ட மண் தாழி யொன்றையும், அதன் மேற்பகுதியை, மென்புழைக்காறுவி (Manometer) எனப்படும் அழுக்க மளவிடும் கருவியுடன் தொடுக்கும் நீண்ட குழா யொன்றையும் கொண்டது. அத் தாழியானது, நிலத் தினுள் பல வளவின வான ஆழங்களில் முறையே புதைக்கப் பட்டு வருவ தாகும். அதன் தொடுப்புக் குழாய் நிலப் பகுதி யினூடே பரப்பினின்று வெளிக் கொணரப்பட்டு, மென்புழைக் காறுவியுடன் கோக்கப்படும். ஆகவே, பல வளவான ஆழங் களில், தாழியினுள் உறுத்தப்படும் அழுக்க வளவுகள், முறையே, அறியப்படுவன. தாழி முறையே புதைக்கப் பட்டு வரும் வைப்புக்களில், அதை ஆங்காங் கெலாம் சூழ்ந்துள்ள மண் பகுதிகளின் ஈரத் தகவின் அளவுகளுக்குத் தக்கவாறு அத் தாழியினுள் கூரலிழைப்புரை யியவை யொட்டி வெவ் வேறளவினதா யான நீர் விரவுவ தாகும். அதை யொட்டித் தாழியுனுள் அழுக்க வளவுகள் வேறுபடுவன. எனவே, பல வளவின வான ஆழங்களி லுள்ள களிமண் பகுதி களினது ஈரத் தகவுகள் அளவை செய்யப்படுகின்றன.

பிறகு, அவ்வவ் வாழங்களினின்று மண் பகுதிகள் தோண்டி யெடுக்கப் படுகின்றன. வேறு தக்க கருவிகளைக் கொண்டு, குறித்த பருமமுள்ள அந்த ஈர மண் கட்டிகளினின்று, முறையே, வெவ்வே றளவான உறித லாற்று வலிமைகளை யொட்டி அகற்றப்படும் நீரி னளவுகள் காணப்படுகின்றன. அங்ஙன மான சோதனைகளின் வாயிலாய், அளவைச் செய்திகள் பல அறியப்பட்டுள. அவற்றில் முக்கியமான தொன்று, எத்துணை மிக்க உறிஞ்சு வலிமையைக் கொண்டும் ஈர மண் கட்டி கொண்டுள்ள நீர் முழுதையும் அகற்றல் இயலாது என்பது. இன்னும், உறித லுறுத்து வலிமையானது, மிகை யளவினின்று, முறையே படிப்படியாய்க் குறைந்து வரும்படி அமைத்து, காய்ந்த மண்கட்டி நீ ரருந்தி வருமாறு செய்து வந்ததை யொட்டி, அக் கட்டி மீட்டும் ஏற்கிற நீரின் அளவுகள், முறையே, அவ்வவ் வலிமைகளை யொட்டி நீ ருகுத்த போதாயிருந்த அளவுகளைவிடக் குறைந்திருப்பன என அறியப்பட்டுள்ளது. இத் தகைச் செய்திகள், கருவிகளின் துணைகொண்டு பெறப்பட்ட அளவை நுதல்வுகள், வரையறைக் கோ டிட்ட தாள்களில் தக்கவாறாய் வரையப்பட்ட வளைக் கோடுகளால் சுட்டப்படும் முறையை யொட்டி தெளிவுற அறியப்பட்டவை. களிமண்ணினின்று ஈரம் உகுத்தப்பட்டு, அது உலர்ந்து வரலை யொட்டிய வளைக்கோடுகளும், காய்ந்த மண் நனைவிக்கப்பட்டு வரலையொட்டிய வளைக் கோடுகளும், கோட்டுத் தாளில் முறையே வரையப்பட்டன. உலர்தலை யொட்டிய கோடு, நனைத்தலை யொட்டியதுடன் பொருந்த வில்லை; உலரலின் தொடர்பான நீ ருகுத்தலி னளவைக் குறிப்பிட்ட வளைக் கோடு, நனைப்படலி னுள்ள நீரடைதலி னளவைகளைச் சுட்டின வளைக்கோட்டை விட எழுகை மிக்கதா யிருந்தது. அவ்வாறான அறிவிப்பினின்றே மண்ணின் ஈரப் பற்றுத் தகவை யொட்டி மேற் கூறப்பட்ட செய்திகள் வெளிவந்தன. பயிர் வளர்ச்சியுடன் மண் தகவுகளைப் பொறுத்த நிரல்கள் எவ்வாறான தொடர்பு கொண்டுள்ளன

என்பதைத் திருந்திய வகையில் திட்டம் செய்தற் கென, அளவை கூர்ந்த அச் செய்திகள் பெரிதும் உதவுவன. மண்ணின் ஈரப்பற் றளவானது, நீர் தோன்றுத் தகை யழுக்கத்தின் விளைவான உறிதலைப் பொறுத்து பையவே மாறிவருவது என்ற நடக்கை பயிர்களுக்குப் பயனுறு வண்ணம் வாய்ந்த தொன்றும். மிகு வறட்சியின் தொடர்பாய் நிலத்தி னடிப் படுகரில் நீர் சுண்டி வரும்போது, பயிரின் வேர்க ளுள்ள மண் பகுதிகளி லான ஈரப் பற்று உடனேயே குன்றுவ தில்லை; ஆங்கு ஈர மகன்ற நிலைமை ஏற்படற்கு நெடிதாகும். படுகர் நீரின் மட்டம் இறங்கி வரலை யொட்டி, உறிதலீர்ப்பு மிக்க வளவா யாகி வருவதாயினும், பயிரின் வேர்கள் ஈரம் பெருக் குறை வின்றி நீடு வாழ்வன; ஏனெனின், வேர்க ளோடின நிலப்பகுதி ஈரம் வற்றுதிருக்கும். வறட்சி போக, மழை பொழியும்போது, முதலினுன நீர்ப் பெருக்கு படுகருக்குத் தடை யின்றி நேரே இறங்குகிறது. மண்ணில் நீர் மெல் லெனவே ஊறும். கயங்கள் நிறைந்துவரும் போதான நடக்கைத் திறங்கள் பேரளவுக்கு நிலத்து மேற்புற நிரல்களைப் பொறுத்திருப்பன. மணல் நுணித்த லான நொய்க் கலவையின் வழியே நீர் தடை யின்றி இறங்கிவிடும். வெயிலில் நன்கு காய்ந்த கட்டு மண்ணின் வழியே நீரானது புனல்களாய் ஓடும்; பாப்பை ஊடுருவி நிலத்திலுட் செல்லாது; நிலத்தில் விடர்களிருப்பின் அவற்றின் வழியே உட்புகுந் தோடலாம்.

இனி, களிமண் புலச் சோதனை மன்றத்தின் மேன்மாட மேறி, மண்ணிலத்துக்கும் அம்போதியாழிக்கு முள்ள இருளையின் உழுவலை ஆய்தல் தகும். மண்ணினூடே காற்று விரவலால், அம் மண் காற்றூட்ட மடைகிறது. எனவே, அவ்வாறுன காற் றூட்டம் நிறுவப்படற் கான ஒப்புரவு மண்ணிடையான் இடுக்குகளைப் பொறுத்திருப்பது. நீர்ப் போக்கையொட்டிக் கூறப்பட்ட உழுவல்களே, காற்றுச் செலவையும் நிர லாக்குவன. ஆனல், காற்றை யொட்டிக் கூரவிழைப்புரை

யியவான நிகழ்ச்சிகள் நடைபெறல் இயலாது. பெருந்தொகை யான தன்னக் கூடுகளைக் கொண்ட பொருளொன்றினூடே, பாகு நீர்மை யினளவு குறைந்த பாறுவி (Fluid) யொன்று வயங்கற்கான முறையின்படி மண்ணின் காற்றாட்டம் நடை பெறுவதாகும். அவ்வாறான காற்றுப் படர்வை யொட்டிக் கிராவணத் திணைவிட விரவுத் தகை (Diffusion) தர மிக்கது. நிலத்திலும் பயிர்களது வேர்களிலும் மல்கியுள்ள நுண்ணுறவிகள் இடையறுது கரியீருயிரியை (Carbon-di-oxide) பயத்திக்கொண்டுள. அவ்வகை யான உலவை (Gas) யின் செறிவு (Density) பொதுக் காற்றினதைவிட மிக்கதா யிருத்தலால், காற்றானது நிலத்தினுள் விரவலினும் மெல் லெனவே கரியீருயிரி யானது அம்போதி யாழியினுள் விரவுவ தாகும். குறித்த பொழுதினுள் நிலத்தினின்று வெளி யேறும் உலவையின் அளவும் நிலத்தினுட்புகும் உலவையின் அளவும் வேறுபட்டனவா யிருந்தலால், சீரான சுற்றுப்பாய்ச் சம் (Circulation) நடைபெறுவதில்லை. ஆதலால், மண்ணிடை அடையுண்ட உலவைப் பகுதியின் புல்லுதத் தகவு பொதுக் காற்றில் அமைப்புப் பான்மையினின்று வேற்றுமை யானதா யிருக்கும், மண் கூறுக்களிடை தங்கும் அம்போதியினின்று நொசித்தனுக்களால் வெடியாக்கை (Nitrogen) பிரிக்கப்பட்டுக் கரைவிய லான உப்பங்களா யமைந்தவாறு நிலத்தில் ஊன்றப் படுகிறது.

நிலங் கொண்ட அம்போதியில் கலந்துள்ள நீராவியி னளவு, மண்ணினது ஈரப்பற்றி னளவு வேறுபடலைப் பொறுத்து மாறுவ தாகும். மண் பகுதி யொன்றினின்று கொறுக்கைவிட லான (Aspirated) உறழ்த்திறக் காற்றுக் கொண்ட நீராவியின் அழுக்கம், அப் பகுதியில் கனைச்செறிந் துள்ள (Condensed) நீரின் அளவைச் சுட்டுவதாம். ஆனால், அவ் வழுக்கத்தி னளவு நிலமீ தான காற்றின் ஈரப் பதனையும் பொறுத்து இருப்பது. வெளிக் காற்று உலர்ந்தும், மண்ணி டைக் காற்று ஈரப் பதன் மிக்கதாயும் இருப்பின் நீராவி

யானது நிலத்தினின்று இவர்ந்து வெளியேறும். ஆதலால், மண்ணி லடைந்த நீர் ஆவியா யாகிறது; தணத்துத்தூவல் (Distillation) என்ற வினை நடக்கை நிரல்படுகிறது. உலர்ந்த நிலப் பாத்தியின் மீதுள்ள அம்போதியாழிப் பகுதி நீராவி அடர்ந்ததா யிருப்பின், முன்னையதற்கு எதிர்ப்போக்கான வினை நடக்கை ஒழுங்க லாகும். அதாவது, அம்போதியாழி யில் தெகுண்டுள்ள நீராவி மிகை நீராய்க் கனைச் செறிந்த வாறான துளிகளாய் உகுத்தப்பட்டு நிலத்தால் அருந்தப்படுவ தாகும்.

இங்ஙனமாக, காற்றும் நீரும் முறையே இயங்கலா லான துயல்வரல்களுடன் கூடவே வெப்ப நிலை மாற்றங்களும் தோன்றுவன. நீரானது ஆவியா யுள்ள நிலைமையில், அந் நீராவியில் ஓரளவான சூடு ஒளிந்துகொண்டவா றிருப்பது. அவ்வாறான கனல், 'பாந்துறைச் சூடு' (Latent heat) எனப் படும். பாந்துறைச் சூட்டைப் பெற்றா லன்றி நீர் ஆவியாய் மாறல் இயலாது. நிலத்தி லுள்ள நீர், அதனின்று ஆவியாய் மாறிச் செல்லுங்கால், அது தான் வேண்டும் பாந்துறைச் சூட்டை நிலத்தினின்று ப்றித்துக் கொள்கிறது. சூட்டை யிழந்தமையின், நிலத்து வெப்ப நிலை குறைந்து போகிறது. அதற்கு எதிர்ப் போக்கான நிரலின்கண், நிலத்தின் மீது நீராவி படிந்து நீராய்க் கனைச்செறி வுறுகிறது. அப்போது நீராவி கொண்டிருந்த பாந்துறைச் சூடு வெளிப்போந்ததா யாகி நிலத்தி லுறைத்தலால், நிலத்தின் வெப்ப நிலை ஏறுகிறது. ஒன்றை யொன்று எதிரிட்டவா றான அவ் விரு நடக்கைகளை யொட்டி நிலத்தின் வெப்ப நிலை அளவு கடந்த மாற்றங்க ளுறும விருப்ப தாகும். பொதுவாகப், பரிதியின் எர்பு வேளை யிலேயே ஆவி யாகும் மாற்றம் நடந்தேறும்; எனவே, அந் நிரலை யொட்டி எற்படும் வெப்ப நிலைத் தாழ்தலானது, வெயி லின் வெம்மை யொட்டி விளையும் வெப்ப நிலை யெழுகையால் ஈடு கட்டப்பட்டு விடும். ஞாயிறு அவாவும் மாலையம் போதி னிலேயே நீராகும் மாற்றம் நிகழ்வது. ஆதலால், அதை யொட்டிய வெப்ப நிலை யேற்றம், ஞாயிறு மறைந்தமையி னுன

குளிர்ச்சி தோற்றுவிக்கும் வெப்பநிலை யிறக்கத்தால் மட்டாக் கப்படுவ தாகும். ஆயினும் வெப்பநிலை வேற்றுமைகளை யொட்டிய மிகைப்படு வளவுகளும் குறைவுபடும் அளவுகளும் எப்போதும் நிகராய் இருந்தலானது ஒல்லா துள்ளமையின், சிறு வரை யான வெப்பநிலை விள்ளல்கள் நேரிடுவன. தன்ன வீற்றங்க ளான அவையும் நிலப் பரப்பின் மருங்கி லான சில வங்குல வளவி னமைந்த ஆழங்களில் மட்டுமே ஏற்படுவன. அவற்றைவிட ஆழ மிக்க வைப்புக்களில் அம் மாற்றங்கள் தோன்றுவாறு தகைக்கும் பொருட்டு ஒன்றுள்ளது. அது காய்ந்த நிலத்தின் சூடு கடத்துத்திறன் (Thermal Conductivity) மிகக் குறைந்த வளவானது என்பதே. எனினும், மண்ணின் ஈரப் பற்றி னளவு மிகுதியாக ஆக, அதன் சூடு கடத்துத் திறனும் மிகுதி யாகும். நாற்றுக்குப் பதினைந்து என்ற வீத மான ஈரப் பற்றுள்ள மண்ணானது, காய்ந்த மண்ணினதை விட இரு மடங்கு மிக்க சூடுகடத்து திற னுடையது. ஈரப் பற்றின் வீதம் அதைவிட மிக்கதா யாதலைப் பொறுத்துச் சூடு கடத்துத் திறன் அதற்குத் தக்க வளவுக்கு மிகையாவ தில்லை. ஈற்றில், அதனளவு நீரினதை நிகர்த்ததா யாகும். அவ்வாறான அளவும் வேறு பலவகைப் பொருள்களின் சூடுகடத்துத் திற னளவுகளுடன் ஒப்பிடப்படும்போது மிகக் குறைந்திருப்பதே. (செம்பின் சூடு கடத்துத் திறன் நீரினதைவிட ஆயிரம் மடங்கு மிக்க வள வானது). பயிர்வளர்ச்சியைப் பற்றின சோதனை நிலையங்கள் பலவற்றில், நிலத்தினுள், பலவளவான ஆழங் களில், முறையே, ஏற்படும் வெப்பநிலை விள்ளல்கள் எவ்வாறு யிருப்பன என்பதை அள விட்டறிந்தபடி யான குறிப்புக்கள் எழுதி வைக்கப்படுவன. அவற்றினின்று வெப்பநிலை மாற்றங் களுக்கும் பயிர் வளர்ச்சித் தகவுகளுக்கு மான தொடர்புக்கள் எவ்வாறு யிருப்பன என அறியப்படுவன; அவ்வாறான பணியை யொட்டி, பாதரச மியங்குக் கண்ணாடிக் குழாய் வகையான வெப்பநிலைக் காறுவிகள் பயன்படா. எனவே, வெப்ப முணர்த்து மீரேலுகை (Thermocouple) என்ற வகை யான வெப்பநிலைக் காறுவிகள் அச்சோதனை யொட்டிக்

கையாளப் படுகின்றன. அவ்வகைக் காறுவியானது, ஒரே
வாறான உலகத்தால் செய்யப்பட்ட கம்பிகள் இரண்டையும்,
வேறொரு உலோகத்தாலான மூன்றாம் கம்பியையும்
கொண்டது. மூன்றாம் கம்பியின் நுனிகள் ஒவ்வொன்றுட
னும், மற்ற விரு கம்பிகளின் ஒவ்வொரு நுனிகளானவை
முறையே தொடுக்கப்படுவன. இவ் விரு கம்பிகளின் மற்ற
நுனிகள், கால்வனிக் காறுவி (Galvanometer) ஒன்றுடன்
கோக்கப்படுவன. முதல் கம்பியின் நுனியும் மூன்றாம் கம்பி
யின் நுனியும் தொடுப்பான சேர்வுநுனியின் வெப்ப நிலை
யானது இரண்டாம் கம்பியின் நுனியும் மூன்றாம் கம்பியின்
மற்றொரு நுனியும் இணைந்த சேர்வு நுனியின் வெப்ப நிலையி
னின்று வேற்றுமைப்பட்ட அளவினதா யிருப்பின், கால்
வனிக் காறுவியினூடே மின்னோட்ட முண்டாகும். ஆத
லால், அஃது, அம் மின்னோட்டத்தின் அளவைச் சுட்டும்.
அம் மின்னோட்ட அளவானது சேர்வு நுனிக ளிடையான
வெப்பநிலை வேற்றுமையி னளவைப் பொறுத்திருப்பது.
ஆதலால், அவ்வாறான கருவியின் துணைகொண்டு வெப்பநிலை
யளவைகள் செய்யப்படலாம். அங்ஙனமான கருவி யொன்
றின் இரு கம்பி நுனிச் சேர்வு நுனிகளி லொன்று நிலத்
தினுள் தக்க ஆழத்தில் புதைத்து வைக்கப்படும். ஆங்கி
னின்று அவ் விரு கம்பிகளின் மற்ற நுனிகள் தனித்தனியாக,
மின் கடத்தா வுறை யிட்ட கம்பி வடங்களுடன் (Insulated
Cables) கோக்கப்படுவன. அவ் வடங்கள் நீளமா யிருப்பன.
அவற்றின் நுனிகள் கம்பிச் சேர்வு நுனி புதைக்கப்பட்டுள்ள
வைப்பினின்று நிலத்தினூடே கொண்டுவரப்பட்டு வெளியே
இழுக்கப்படுகின்றன. ஒரு வடத்தின் நுனி கால்வனிக் காறு
வியில் இணைக்கப்படுகிறது. புதைக்கப்பட்ட கம்பிகளி
லொன்று செய்யப்பட்ட உலோகத்தினாலேயே செய்யப்பட்ட
இன்னொரு கம்பியின் நுனி யொன்று கால்வனிக் காறுவியில்
தொடுக்கப்படுகிறது. இக் கம்பியின் மற்றொரு நுனியானது
புதைக்கப்பட்ட கம்பிகளில் மற்றொன்று செய்யப்பட்ட உலோ
கத்தினாலேயே அமைக்கப்பட்ட இன்னொரு கம்பியின் நுனி
யொன்றுடன் சேர்க்கப்படுகிறது. இவ்வாறான சேர்வுநுனி
வெப்பநிலை மாறாச் சாதன மொன்றினுள் வைக்கப்படும். இக்
கம்பியின் மற்றொரு நுனி இரண்டாம் வடத்தின் நுனியுடன்
தொடுக்கப்படும். பல வள வான ஆழங்களை யொட்டி, ஒவ்
வொரு ஆழத்திற்கும் ஒவ்வொன் றானபடி மேற்கூறப்பட்ட

கருவித் தொடுப்புப் பொருந்தல்கள் முறையே அமைக்கப்படு கின்றன. அங்ஙனம், பல வளவின வான ஆழங்களி லுள்ள வைப்புக்களிலான வெப்பநிலை யளவுகள் இடையரூது அல்லும் பகலும் அக் கருவிகளின் வாயிலாய் நிலமீதினின்றே அறியப் படுகின்றன. அவ் வழியே பெறப்படும் அளவைகளைக் கொண்டு, வரையறைக் கோடிட்ட தாள்களில் தக்கவாருன வளைக்கோடுகள் வரையப்படுனை. அவ் வளைக்கோடுகளின் நுணித்தல்களைத் தக்க முறையில் உன்ன மூன்றிக் காணலால், நிலப் பகுதிகளி லான வெப்பநிலை மாற்றங்களை யொட்டிய பய னுறு செய்திகள் பல கற்றறியப்படுவன. அங்ஙனம் அறியப் பட்டுள்ள செய்திகளில் முக்கியமான சில பின்வருமாரும்:

நிலப் பரப்பின் மருங்கிலேயே, வெப்ப நிலை மாற்றங்களை யொட்டிய வீச்சு வரைவுகள் (Amplitudes) மிக்க வளவின வாய் இருப்பன. கீழே யிறங்கிச் செல்லச் செல்ல, அவற்றி னளவுகள் குறைந்துகொண்டே போவன. இன்னும் ஒருநாட் பொழுதினுள், மிகு வரையான வெப்பநிலையை யொட்டிய வேளைகள், மேலிருந்து கீழே யிறங்க இறங்க, பின்பாய்க் கொண்டே போகின்றன. அவ்வாருன பின்றலும் (Lag) வீச்சுவரைவுக் குன்றலும் (Degradation of Amplitude) வெப் பம் பொறுத்த மண் தகவுகளுடன் தக்க தொடர்புற் றிருப்பன. ஆதலால், நிலத்தில் மிகு ஆழமாய் ஊன்றி யுள்ள பெரும் பயிரினது வேர்கள் வெளிக்காற்றில் ஏற்படும் சிறு வரையான வெப்பநிலை மாற்றங்களை யொட்டிப் பாதிக்கப் படா. அம் மாற்றங்கள் கடுமை மிக்கனவாயும் நீடித்தன வாயும் ஆகும்போதே அவ் வேர்கள் உறுத்தப்படுவன. இவ் வாரு யிருத்தலானது, பயிர் வாழ்க்கைக்கு மிகவும் முக்கிய மான தகவாம்.

மண்ணுக்கும் நீருக்கும் காற்றுக்கு மான தொடர்புக் களை யொட்டி இதுகாறும் நாம் கூறிவந்தவை யெல்லாம் நிலந் திருத்து வேலையைப் பொறுத்து நன்கு குறித்தற்பாலன. அவ் வினையானது, பயிர்களின் வேர்கள் காற் றூட்ட மாகி நீருண்டவாறு இருக்கும்படி நிலத்தைத் திருத்தி யமைத்தல் என்பதே. நிலம் வள மிக்கதாயும், தட்ப வெப்ப நிலை நற்பாங் குற்றதாயும் வாய்ந்ததாயின், நிலந் திருத்தும் பணியாற்றப்பட வேண்டுவதான நிலைமை ஏற்படாது. காம்புத் தகவு விதந் தும், தட்ப வெப்ப நிலை வறண்டவாருயு மாயின், நிலத்தைச்

செம்மை யாக்கும் வேலை இன்றியமையாததா யாகும். நிலத்தின்மீது பெய்த மழை நீரானது பரப்பின் மீதாகவே ஓடிவிட்டா லன்றி, அஃது இறுதியில் அடிப் படுகர்க்கு இறங்குவதே யாகும். அவ்வாருன ஊற்ற நிலைமை எய்தும்போது கூரலிழைப்புரை யியவை யொட்டிப் பயிரின் வேர்களை நீர் நனைப்பதாகும். ஆதலால், வேர்களுக்குக் கீழ்ப்புறமான பகுதிகள் அழுத்தமா யிருத்தல் வேண்டும். அவ்வாறு இருத்தலாலேயே அடிப் பாறையினின்று நீர் மேலே ஏறுதல் எளிதாகும். நிலப் பரப்பினின்று வேர்களின் அடிவரையி லான மண் பகுதிகள் விறப்பா யில்லாதபடி, சிறு சிறு கூறுகளா யானவாறு அவை உடைத்து விடப்படல் வேண்டும். அதாவது, நிலத்தைத் தக்கவாறு கொத்தவேண்டும். அங்ஙனம் பண்ணலாலேயே மழை நீர் அடிப் பகுதிகளுக்கு எளிதாய் இறங்கும். இறங்கின நீரானது கூரலிழைப்புரை யிய லான இவர்ச்சியொட்டி மீட்டும் ஊறி யேறி நிலப்பரப்பை அடையாதவாறு தகைக்கப்படும். அப்படி அரும்பிற்ருயின், பரப்பினின்று அஃது ஆவியாய்ப் போய்விடுமாதலால், நிலம் அந் நீரை இழந்தபடி யாகும்.

எனவே, பொருளுழுவலை யொட்டி நிலமானது மேற்புறமாய் விரிந்துவரும் கூரலிழைப்புரைகள் பல அடுத்தடுத்துச் செங்குத்தாய் நிறுத்தப்பட் டுள்ள வாருன பெரும் தூணியொன்றை ஒத்ததாம். பரப்பை யடுத்த நில மருங்கு விறப்பாயிருத்தலை யொட்டி ஏற்படும் இன்னொரு குறையானது, மழை வீழ்ச்சியின்போது அந்நீர் நிலத்தினுள் இறங்காமல் பரப்பிலேயே பாய்ந்து, அதன்பிறகு ஆவியாய்ப் போய்விடல் என்பது. மண் ணீட்டத்தைச் சிறு சிறு பகுதிகளாய் உடைத்துக் கிளர்ந்து விடலானது வேர்கள் காற்றோட்டம் பெறற்கு உதவுவதாம்.

ஆகவே, நிலத் திருத்துமையின்பாற் பட்ட முக்கியமான பணிகள் இவையே. (1) ஆழமாய் உழுது அடியில் கிடக்கும் புது மண் துண்டங்களைத் தோண்டி யெடுக்கப்பட்டவாறு செய்தல். அவ்வாறு செய்தலால் பயிர சாகுபடியை யொட்டி ஓய்ந்துபோன வாருயாகா புதிய நொசித்தனு வீட்டங்களும் மண் கட்டிகளுடன் கிளப்பப்பட்டு மேலே கொணரப்படுவன. அவ்வாறுகொண்டு வரப்பட்ட மண் கட்டிகள் கால் நடை

களின் மிகிப்பையும் இன்னும் பலவாறான பொருட்டுக்களையும் ஒட்டிச் சிறு கூறுகளாய் கொறுக்கப்படுகின்றன. (2) இலேசாக மேலோட்டமாய்க் கொத்துதல், பரம்படித்தல், இன்னோரன்னவை. இவ் வினைகளை யொட்டி விதை தெளிக்கப்படற்கும் நாற்று நடப்படற்கும் தக்கவாறு நிலம் காற்றோட்டம் பெற்றவாறாய் அமைக்கப்படுகிறது. (3) பாறையால் கொத்தி, வேர் மட்டத்திற்கு மீதான மண் உதிர்ந்து பரவலான வாறு யிருக்கும்படிப் பொருத்துதல். அவ்வாறு செய்யப்படாவிடின், கடு மழை யடித்தலை யொட்டி மண்ணின் நொய்ம்மை திட்ட வளவைவிட மிக்கதா யாகும்.

உழவுத் தொழிலின் மேன்மையை என்றும் போற்றி வந்துள்ளது, நம் தமிழ் நாடு. அத் தொழிற் பாற்பட்ட கைப் பழக்கத் தெரிவிற் சிறந்தோர் மலிந்துள்ளது இந்நாடு. மேலை நாட்டு முறையை யொட்டி அத் தொழி லறிவின் நுட்பங்களை வகுத்துக் கூறும் தெரியற் செய்கை வழியே யான தொழின் முறை நூல்கள் பல நம் நாட்டில் மல்கிப் பெருகல் ஏற்றதே யன்றோ? அவ்வாறான கெழுமையில் ஊக்கங்கொண்டு, அறிஞரும், தொறுவினோரும் கூட்டுறவுடன் உழைத்தல் வேண்டும். அப்போது ஆன்றோர் தொழிலை யிகழாதவரா யாகி, வினைச் சிறப்பின் மெய்ம்மையுட னுன தெரிவின் விரிந்து, மொழிப் பெருக்கம் விளைவித்தவரா யாவார்; தொழுவர் நூலறிவைப் புறக்கணிக்காதவரா யாகிக், கல்வியின் பட்டாங் குடனுன பணியின் பொலிந்து, மொழியை உயிர்க்களை ததும்பின வா ருக்குவார். அந் நிலைமை நம் நாட்டில் உறுவதாகும் என எண்ணல் நான் காணும் பகற் கனுத் தானோ? அன்றி நன வாகும் நாளொன்று அண்மையில் உளதோ?

# திருக்குறள்
## பொன்னுரைப் பகுதிகள்.

உரைகாரர்: கொக்குவில் திரு. வ. பொன்னையா, B.A. (Hons), Ph.D.

(முற்றொடர்ச்சி: துணர் 24, மலர் 1, பக்கம் 16.)

### கூடா வொழுக்கம்

கூடா வொழுக்க மாவது வீடுபே றாகிய பயனை யெய்தும் பொருட்டுத் தவஞ் செய்து, மும் மலங்களையும் பற்றறத் துடைத்து, ஞானத்தைத் தலைப்படல் முயல் வார்க்குப் பிராரத்த வினை நுகர்ச்சிக்கட் சென்ற தற் போதத்தா னாகித், தவத்தொடு பொருந்தாத தீய வொழுக்கம்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும் மலங்களையும், வதஞ் செய்து, பற்றறத் துடைத்து உண்மை ஞானத்தைத் தலைப்படல் முயல்வார்க்கு உடம் புள்ளளவும்பிராரத்தவினை நிற்கு மாகலான், அவ் வினை நுகர்ச்சிக்கண் அவர்க்கு ஒரோவழி தற்போதம் பரிசயத்தானே முனைந்து நின்று தாக்க, அதுவே சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உள வாகும், அவை உளவாக, ஏகதேசப் பொருள்கள் காட்சிப் படும். அவை காட்சிப்பட, அவற்றைச் சுட்டியறிவ தாகிய விபரீத வுணர்வு மேம்பட்டு மெய்யுணர்வுக் குறியைக் கீழ்படுத்திக் கூடா வொழுக்கத்தின்கண் உய்த்துப், பிறவிக்கு வித்தாகும் ஆகலான், பாச வீடும், வீடு பேறு மாகிய பயன்களை விரும்பித் தவஞ் செய்வா ராவார் பிரா ரத்த வினை நுகர்ச்சிக்கண் தற்போதம் முனையாதவாறு சிவோகம்பாவனை யென்னுஞ் சாதனத்தில் உறைத்து நின்று கூடாவொழுக்கத்தை தவிர்தல் வேண்டு மென்பது அறிவுறுத்தற்கு இது தவத்தின் பின் வைக்கப்பட்டது.

(1) மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

இ-ள். மனத்தது மாசாக—தம் மனத்தின் கண்ணே உள்ள தாகிய பாவகத் தொகுதி தமக்குப் பிறப் பிறப்புக் களைத்தரும் மாசாகும்படி, மாண்டார் நீராடி மறைந்தொழு கும் மாந்தர் பலர் – மாட்சிமை யின்றியும் தவத்தான் மாட்சிமை யுடையாருடைய நீர்மையே தம் தன்மை யெனப் பிறர் நினைக்குமாறு நடித்துக் காட்டி அத் தன் மையின் கண்ணே மறைந்து தம் கூடா வொழுக்கத்திற் செல்லும் மாந்தர் இவ் வுலகத்துப் பலர், ஆகலான், தவஞ் செய்வாராவர் மாசாகாமை வேண்டின் கூடாவொழுக்கத் தைத் தவிர்க்க எ-று.

மனத்தது ஏழாம் வேற்றுமைப் பொருண்மைக்கண் வந்த குறிப்பு வினைலாலணையும் பெயர். ஈண்டு அது மனத் தின் கண்ணே யுள்ள தாகிய பாவகத் தொகுதியைக் குறித்து நின்றது. அப்பாவகந்தான், தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மம், அஞ்ஞானம், அவை ராக்கியம், அனைசுவரியம் என எண் வகைப்படும். இவை யெல்லாம் புத்தியின் பண்புக ளாயினும், மனத்தின் தொழிற்பாடே ஏதுவாக நிகழ்வன வாகலான், ஆகுபெய ரான் மனத்தின் பண்புக ளெனப்படும். மனத்தது மாசாக என்பதால், காரணத்தைக் காரியமாக உபசரித்தார். ஆக- செயவெனெச்சம். அது எதிர்க்காலத்துக்கண் காரியப் பொருட்டில் வந்தது. மாசாகாமை வேண்டின், கூடா வொழுக்கத்தைத் தவிர்க்க என்பது குறிப்பெச்சத்தாற் பெறப்பட்டது. மாண்டார் நீர்மை யென்றது, மெய்ஞ் ஞானந் தலைப்பட்டாரது தன்மையை. மாசாகும்படி ஆடி யென்றும், மாசாகும்படி மறைந் தென்றும் இரு வழியுங் கூட்டுக.

'ஆடி' யென்றதனால், பிறரை மயக்குதலும், மறைந்து என்றதனால், பிறரை வஞ்சித்தலு மாகிய இவற்றை முன்னிட்டு வரும் கூடாவொழுக்கம், 'மாசாக' என்றத னால், வீடு பேற்றைத் தடுத்து நின்று துன்பங்கள் பயக்கும் பிறவிக்கு வித்தா மென்றவாறு.

கொல்லாமை முதலிய தன்ம மாகிய அறம்பற்றி ஞான மும், இஞ் ஞானமாகிய அறிவுபற்றி வைராக்கியமும், இவ் வைராக்கிய மாகிய வெறுப்புப்பற்றி அணிமா முதலிய

எண் வகை ஐசுவரியமும், இவ் வைசுவரிய மாகிய செல்வப் பே றெய்திவன் செருக் கெய்தித், தவத்தைக் கைவிட்டு, விடயப் பற்றுள் தொடக்குண்டு கிடப்ப, இப் பேறேதுது வாகக் கொலை முதலிய அதன்மமும், இவ் வதன்ம மாகிய பாவம்பற்றி அஞ்ஞானமும், இவ் வஞ்ஞானமாகிய அறி யாமை பற்றி அவைராக்கியமும், இவ் வவைராக்கியமாகிய ஆசைபற்றி அநைசுவரியமும், இவ் வநைசுவரிய மாகிய வறுமை யெய்திவன் தன் வறுமையை நீக்கிக் கோடற் பொருட்டுத் தன்மத்திற் கருத்தைச் செலுத்த, இதுவே ஏதுவாகத் தன்மமும், அதன் வழித் தாய ஏனைய பாவங்க ளும் மறித்தும் மறித்தும் வீடுபேற்றைத் தடுத்து நிற்கும் மாசாகும் வண்ணம் கூடாவொழுக்கத்திற் பலர் ஒழுகுகின் றார்கள். அவ்வண்ணம் வேண்டா வாயின், தவஞ் செய்வா ராவார் கூடா வொழுக்கத்தைத் தவிர்க என்று கூறியவா றாயிற்று.

இக் குறளுக்குப் பரிமேலழகர், 'மாசு தம் மனத்தின் கண்ண தாக பிறர்க்குத் தவத்தான் மாட்சிமை யுடையராய் நீரின் மூழ்கிக் காட்டித் தாம் அதன்கண்ணே மறைந்து செல்லும் மாந்தர் உலகத்துப் பலர்' என்னும் உரை யையும், 'மாசுகாமவெகுளிமயக்கங்கள் அவை போதற் கன்றி மாண்டா ரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், அத் தொழிலை அவர் மறைதற் கிடனாக்கினார்' என்னும் உரை விளக்கத்தையுந் தந்தனர்.

நீராடுதலைத் துறவை மேற்கொண்டு நின்று தவஞ் செய்வாரே யன்றியும், துற வில்லாத அறத்தின்கண் ஒழுகு வோரும் செய்வா ராகையான், அச் செயல்பற்றி ஒருவரைத் தவஞ் செய்பவ ரென்று முடிவாகக் கொள்ளல் ஏலாமை பெற, அன்னவரைத் தவத்தான் மாட்சிமை யுடையா ரென்று பிறர் கருதுவ ரென அழகியார் நினைத்தமை செவ் விதன் றென்க.

இப் பாட்டு என் னுதலிற்றோ வெனின் :—மனத்தின் கண் ணுள்ள பாவகங்கள் வீடுபேறு தலைப்படுதலைத் தடுக் காமை வேண்டின், கூடா வொழுக்கத்தைத் தவிர்க எ-து.

2. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

இ-ள். புறம் குன்றி கண்டு அனையரேனும்—வெளி யொழுக்கத்தில் குன்றிமணியின் செம்மையைப் போல நடையாற் செம்மையும், கற்கண்டின் இனிமையைப் போலச் சொல்லால் இனிமையு மாகிய இவ் விரண்டையு முடையா ரெனினும்; அகம் குன்றி மூக்கின் கரியார் உடைத்து-உள்ளொழுக்கத்தில் குன்றிமூக்கின் இருண்ட தன்மைபோல மன மிருண்ட தன்மை யுடையாரை உடைத்து உலகம், ஆகலான், தவஞ் செய்வா ராவர் மன மருளாமை வேண்டின், கூடாவொழுக்கத்தைத் தவிர்க எ-று.

புறம், அகம் என்பன ஆகுபெயர். அவற்றுக்கு ஏழ னுருபை விரிக்க. குன்றி என்னும் கொடியின் பெயர் அதன் மணியைக் குறிக்கின்றமையின் பொருளாகுபெய ராதல் காண்க. உவமானங்களின் செம்மை நிறமும், நாவின் இனிமையும், கருமை நிறமும் பொருளின்கண் ணுள்ள செவ்விய நடை, செவி இனிமை மன மிருண்ட தன்மை யாகிய இவற்றொடு பண்பால் ஒத்தலின், இவை பண் புவமை.

தவத்தான் மாண்டார்கண்ணே நிகழுகின்ற செவ்விய நடையையும், இன் சொல்லையும் மாணுதார் பற்றிநின்று அவற்றின்கண்ணே மறைந்து பிறரை மயக்கவும் தம் வயப் படுத்தியும் அவரைக் கடைபோக்க வறியாது கெடுத்து, முன்னரே தம் மாசுண்ட மனத்தினைப் பின்னரும் அக் கெடுத்தலினனே மாசாகும்படி அகத்தே கூடாவொழுக் கத்தை மேற்கொண்டாராவர். இவ் வுலகத்துப் பலர் உள ராகையான், அக் கெடுத்தற் காரணத்தான் வரும் மாசா காமை வேண்டின் தவஞ் செய்வா ராவார் கூடாவொழுக் கத்தைத் தவிர்க வென்று கூறியவா றுயிற்று.

தவத்தான் மாணுதாருட் பலர் பிறரைச் செவ்விய நடை காட்டி மயக்கி இன்சொல்லால் தம் வயப்படுத்துவ ரென்க.

இக் குறளுக்குப் பரிமேலழகர், 'குன்றியின் புறம் போல வேடத்தாற் செம்மையுடைய ராயினும், அதன் மூக்குப் போல மனமிருண்டிருப்பாரை உடைத்து உலகம்' என்னும் உரையைத் தந்தனர்.

குன்றி கண்டனைய ரேனும் என்று சொல்லுவ தொழிந்து, குன்றி யனையரேனும் என்று கூறினும் இவர் கருத்துப் பெறப்படு மாகலானும், மீண்டும் ஆசிரியர் குன்றி னனையர், மயி ரனையர் எனக் கூறிப்போந்தாரே யன்றி, குன்றுகண்டனையர் மயிர் கண் டனையர் எனக் கூறினா ரல்லர் என்பத னானும் அழகியார் தம் உரையால் வழீஇனா ரென்க.

இப் பாட்டுஎன் னுதலிற்றோ வெனின்:-தவஞ் செய்வா ராவார் பிறரைக் கெடுத்தலான் வரும் மாசாகாமை வேண் டின் கூடாவொழுக்கத்தைத் தவிர்தல் வேண்டும். எ-து.

(3) வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

இ-ள். வலியி னிலைமையான் வல்லுருவம் – கூடா வொழுக்கத்தின்கண்ணே செல்லும் தன் மனத்தைத் தடுக் கும் வலியினது இன்மை யாகிய நிலைமையினை யுடையான் அவ் வலி யில்லாத காரணத்தானே தவ முதிர்ச்சியுடையா ரது வல்லுருவைக் காட்டி அதன்கண்ணே மறைந்துநின்று அக் கூடாவொழுக்க மாகிய பொரு ளின்பங்களைத் துய்த் தல்; பெற்றம் புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று பைங் கூழிற் செல்லுந் தன் மனத்தைத் தடுக்கும் வலியில்லாத காரணத்தானே பெற்றமானது புலியின் றோலைப்போர்த்து அதன்கண்ணே மறைந்து நின்று அப்பைங் கூழை மேய்ந்தாற்போலும்; ஆகலான் தவஞ் செய்வாராவார் கூடா வொழுக்கத்தைத் தவிர்க எ–று.

வலி யின்மை யென்னும் ஆறும் வேற்றுமைத்தொகை ஒட்டி ஒரு சொல்லாய் நின்று, பின்னர் நிலைமை யென்பத னோடு தொக்குப் பண்புத்தொகையாய் ஒரு சொன் னீர்மைத் தாகி, அதன் பின்னர் ஆன் என்னும் விகுதி யொடு புணர்ந்து வலியி னிலைமையா னெனப் பண்பு கொள் பெயராய் நின்றது. வலியி னிலைமையா னெனச் சிறப்

புடை ஆண்பால் பற்றிக் கூறினு ரேனும், பெண்பாலுங் கொள்ளப்படும். வல் லுருவம் பண்புத்தொகை. அற்று வினையுவமை வாய்பாட்டுப் பொருளில் வந்த ஒன்றன் பால் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. உவமை இல்பொரு ளுவமை. வலியினிலைமையான் வல் லுருவங் கோடற்குக் காரணம் தன் மனத்தைத் தடுக்கும் வலி யில்லாமை யென் பதை உடம்படு புணர்த்தலென்னும் உத்தியாற் பெற வைத்தா ரென்க. உவமானத்தில் புலியின் றோல் போர்த் துப் பைங்கூழை மேய்தல் என்பதற் கேற்பப் பொருளில் தவமுயற்சி யுடையாரது வல்லுருவங் காட்டிப் பொரு ளின் பங்கள் துய்த்தல் என்று கூறப்பட்டது. வலி யில்லாத காரணத்தானே யெனப் பொருளில் பெறவைத்த கார ணத்தை உவமானத்துக்குங் கொள்க.

பசு புலியின் றோலைப் போர்த்தற்குக் காரணம், புலி பைங்கூழை மேயா தென்பதை யுட்கொண்டு நின்று காவலர் அதனைக் கடியார் என்பதே. அதுபோலத் தவஞ் செய்பவன் தவ முதிர்ச்சி யுடையாரது வல்லுருவங் காட் டற்குக் காரணம் தவ முதிர்ச்சி யுடையார் பொரு ளின்பங் களைத் துய்க்கார் என்பதை யுட்கொண்டு நின்று பிறர் தன்னை நகா ரென்பதே. அன்றிப், பைங்கூழிடைக் கண்ட விலங்கு அதனை மேயு மென்று கருதி ஒருகால் காவலர் கடிய வரின், புலிவேடத்தான் அவரை விரட்டி விட்டுத் தா னது செய்யலா மென்று கருதிப் பசு புலியின் றோலைப் போர்த்து நின்றது என்பதை உவமானம் நுதலிற்றென்றுங் கொள்ளலாம். அவ்வாறு கொள்ளின், பொருளில், பொரு ளின்பங்களிடைக் கண்ட தவஞ் செய்வா னுவான் அவற்றை நுகர்வா னென்று நினைந்து பிறர் எள்ளி நகவ ரின், அவன் தவ முதிர்ந்தார் தன்மை காட்டி, அவரை விரட்டி விட்டுத் தான் அவற்றைத் துய்க்கலா மென்று கருதி அத் தன்மை காட்டி நின்று னென்பதைக் கொள்க.

ஈண்டு விரட்டுத லென்பது விரட்டப் பட்டாரை அஞ்சி நிற்கும் நிலையுட் புகுத்துதல் மாத்திரையாய் நின்றது. புலித் தோலைப் போர்த்த பசுவைக் கண்டு காவலர் அஞ்சி நிற்கும் நிலை புலி தமக்கு ஏதம் விளைக்கு மென்னுங் கருத்தானுயது. தவ முதிர்ச்சி யுடையாரது தன்மை காட்டி நிற்கும் தவஞ் செய்பவனைக் கண்டு பிறர் அஞ்சி நிற்கும் நிலை தவ முயற்சி யுடையாரைப் பிழைபட நினைப்பின் தமக்குப் பாவம் வரு மென்னுங் கருத்தா னுயதென்க.

இக் குறளுக்குப பரிமேலழகர், 'மனத்தைத் தன்வழிப் படுத்தும் வலியில்லாத இயல்பினை யுடையான் வலி யுடையார் வேடத்தைக் கொண்டு தான் அதன்வழிப் படுதல் பசு காவலர் கடியாமற் புலியின் றோலைப்போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற் போலும்' என்னும் உரையைத் தந்தா ரெனினும்' பெற்றம் தனக் குரிய புல்லை விட்டு பிறர்க் குரிய பைங்கூழை மேய்ந்தாற் போலு மென்னும் உவமையான் தனக் குரிய இல்லாளைத் துறந்து நின்றவன் பிறர்க்குரிய மகளிரை விழைவா னென்பது பெறப்படு மென்று உரை விளக்கத்தில் கூறினுர். ஆயின், உவ மானத்தில் பசுவின் றொழிலுக் கேற்பப் பொருளில் எடுத்துக் கொள்ளப்பட்டது இல்லறத்தானின் றொழிலா, அல்லதூஉம் துறவறத்தானின் றொழிலா என்பது. இல்லறத்தானின் றொழி லெனின், அவன் தனக் குரிய இல்லாளைத் துறந்து பிறர்க் குரிய மகளிரை விழைத லென்பது அவனுக்குப் பொருந்து மாயினும், ஆசிரியர்க்கு அது கருத்தன் றென்க. இப் பொருளையே ஆசிரியர் நுதலப் புகுவாராயின், இப் பாட்டை இல்லறவியலிலே யன்றி ஈண்டு வையா ரென்க. அன்றித், துறவறத்தானின் றொழிலெனின், அவனுக் குரியவளாக ஒருத்தியு மில்லாத காரணத்தானே, அவன் தனக்குரிய இல்லாளைத் துறந்து பிறர்க்குரிய மகளிரை விழைத லென்பது அவனுக்குப் பொருந்தா தென்க.

பொருந்துமா றெங்ஙனமெனின், துறவை மேற்கொண்டா னுவான் தனக்குரிய பேரின்ப நுகர்ச்சியை விட்டு, அதை மேற்கொள்ளா ராகிய பிறர்க் குரிய சிற்றின்ப நுகர்ச்சியை விழைதலே என்று கூறிக் காண்க.

இப் பாட்டு என்னுதலிற்றோ வெனின்,—தவஞ் செய்வா ராவார் பிறரை விரட்டியேனும், மயக்கியேனும், தமக்குக் கேடு விளைவிக்காமை வேண்டின் கூடாவொழுக்கத்தைத் தவிர்க எ—து.

(4) தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று

இ-ள். தவமறைந்து அல்லவை செய்தல் — கூடா வொழுக்கத்தை யுடையான் பிறரை மயக்கும் பொருட்டுத் தவ வேடத்தின் மறைந்து நின்று தவத்தைக் கைவிட்டுப் பிறரை வஞ்சித்தலாகிய பாவத்தைச் செய்தல்; வேட்டு வன் புதல் மறைந்து புட் சிமிழ்த்தற்று — வேட்டுவன் புட்களை மயக்கும்பொருட்டுப் புதலை மேற்கொண்டு அதன் கண் மறைந்து நின்று தன் னேர் போக்கைக் கைவிட்டுப் புட்களை பிணித்த லாகிய பாவத்தைச் செய்தாற் போலும், ஆகலான் தவஞ் செய்வானுவான் கூடா வொழுக்கத்தைத் தவிர்க எ-று.

தவம் ஆகுபெயர். தவ மறைந்து என்றதற்கு தவ வேடத்தின் கண் மறைந்து என்று ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க; அல்லவை பாவம். உவமை பய னுவமை. வேட்டுவனுக்குப் புட்களை மயக்கலும் பிணித்தலு மாகிய இருவகை வினைகளா லாய பாவம் ஒருங்கே வருமாறு போலக் கூடா வொழுக்கத்தினை யுடையானுக்குப் பிறரை மயக்குதலும் வஞ்சித்தலு மாகிய இரு வகை வினைகளா லாய பாவம் ஒருங்கே உண்டாகு மென்று கூறுவராய் உவ மையின் வைத்துக் காட்டியவாறாயிற்று.

இவ் வெண்பாவின் உரை விளக்கத்தில் பரிமேலழகர் தவ மல்லவற்றைச் செய்த லாவது பிறர்க் குரிய மகளிரைத் தன்வயத்த தாக்குதல் என்று கூறினு ரெனின், அவர் இக் கூற்ருனே தவ மல்லவற்றைச் செய்த லென்பதை ஒரு புடைப் படுத்திய காரணத்தான் உரை வழி இஞரென்க.

தவஞ் செய்தும் உண்மை ஞானந் தலைப்படாதா னொருவன் தவ முதிர்ச்சி காட்டி மாணவர் குழாங்களைத் தன்வயப் படுத்திப் பாவஞ்செய்து நிற்பின் அவன் அவர் களைக் கடைபோக்க வல்லுந னல்ல னுகலான், தவ மல் லவை செய்தவ னுவா னென்க. வல்லுந னல்லன் ஒருவன் வல்லுநன் என்னும் ஒரு தோற்றங் காட்டிப் பாவஞ் செய்து நின்றமையான், அவன் அவரை வஞ்சித்தவனுமாவன்.

இப் பாட்டு என்னுதலிற்ரோ வெனின் :— பிறரை மயக்குதலும் வஞ்சித்தலுமாகிய இருவகை வினைகளா லாய பாவம் ஒருங்கே உண்டாகாமை வேண்டின், தவஞ் செய்வானுவான் கூடா வொழுக்கத்தைத் தவிர்க எ-று.

(5) வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

இ-ள் தானறிகுற்றம் தன்நெஞ்சம்படின் – தான் குற்றமென் றறிந்த கூடாவொழுக்கத்தின் கண்ணே தன் னெஞ்சம் வீழுமாயின்; வான் உயர் தோற்றம் எவன்செய் யும் — தவஞ்செய்வானுக்கு விண்ணுற்ருேங்கிய புகழ்தான் என்ன பயனை அளிக்கும், அளியாது ஆகலான் அன்னுன் கூடாவொழுக்கத்தைத் தவிர்க எ-று.

வானுயர் தோற்றம் என்றது 'விண்ணுயர் புட்கொடி' என்ருற் போல நின்றது. உயர் தோற்றம் வினைத்தொகை. எவன் செய்யும் என்றதனல் பயனளியா தென்றபடி, அறி குற்றம் செயப்பாட்டு வினைப் பொருள் தொக்க வினைத் தொகை. குற்றப் படின் என்றதற்குக் குற்றத்தின் கண்ணே படின் என ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க. ஈண்டு குற்ற மென்றது கூடா வொழுக்கத்தை.

தா னறியாது செய்யும் குற்றத்தின் கண்ணினும் அறிந்து செய்யுங் குற்றத்தின் கண்ணே தன் னெஞ்சு வீழு மாயின், அது மிகப்பெரிய குற்றத்த தாகிவிடும் என்பது தோன்ற 'தன்னெஞ்சந் தானறி குற்றப் படின்' என்ருர். இனி, அன்னவனுக்கு 'வானுயர் தோற்றமெவன் செய்யும்' என்ற துணையானே, அவன் தவமுதிர்ச்சி யுடையார் தன் மையை மேற்கொண்டு, அதன் கண்ணே மறைந்து நின்று, தன் கூடா வொழுக்கத்தைச் செய்கிருன் என்றும், அவ்வா ருெழுகின் ஒரு கால் அவன் புகழ் உலகெங்கும் ஓங்கினு மோங்கு மென்றும், அப்புகழ்தான் மறை வெளிப்பட்ட காலை கொல்லப்படு மாகலான் அதனை நிலையுதல் உள்ள தெனக் கொள்ளல் ஆகாதென்றும், அத்தகை நிலையுத லில் லாத புகழின் பொருட்டுக் கூடாவொழுக்கத்தை மேற் கொள்ளல் தகா தென்றுங் கூறியவாருயிற்று.

இக் குறளுக்குப் பரிமேலழகர் 'ஒருவனுக்கு வான் போலுயர்ந்த தவ வேடம் என்ன பயனைச் செய்யும் தான் குற்றமென் றறிந்த அதன் கண்ணே தன் னெஞ்ச தாழுமா யின் ' என்னும் உரையையும், 'அறியாது செய்த குற்ற மல்லது அறிந்து வைத்துச் செய்த குற்றம் கழுவப்படாமை யின், நெஞ்சு குற்றத்ததாயே விடும். விடவே, நின்ற வேட மாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலே யல்லது வேறு பயனில்லை யென்பதாம்' என்னும் உரை விளக்கத் தையும் தந்தார்.

மேற் கூறியவாற்ருன் அழகியார் கூற்று கூடாவொழுக் கத்தில் நிற்பானுக்குத் தவ வேடத்தாற் புறத்தாரை வெருட்டுதலல்லாத வேறு பயன் வேண்டின் கூடா வொழுக்கத்தைத் தவிர்தல் வேண்டும் என்பதாம். வேடத் தால் ஒரு பெரும் பலனு மில்லை யென்பதை ஆசிரியர் 'மழித்தலு நீட்டலும் வேண்டா' என்னும் வெண்பாவால் கூறிஞராகலான், இவ்வுரை ஈண்டைக் கேற்புடைய தன் றென்க.

இப் பாட்டு என் னுதலிற்ருேவெனின்:— கூடா வொழுக்கங் காரணமாக நிலை யுள தாகிய புகழ் வாராது; அத் தகைப் புகழ் வேண்டின் தவஞ் செய்வா னுவான் கூடா வொழுக்கத்தைத் தவிர்க எ-று.

(தொடரும்.)

# உவ நால்

வித்துவான், திரு. M. குஞ்சிதபாத தேசிகர்,
தமிழாசிரியர், நன்னிலம்.

மனங் கலங்காமை என்பது மனம் துன்பங்களால் வருந்தா திருத்தல் என்று பொருள்படும். இதனை வள்ளுவர் இடுக்கண் அழியாமை என்று புகல்வர்.

இவ் வுலகின்கண் உள்ள உழவ னுயினும், உயர் அரச னுயினும், ஆணுயினும் பெண் ணுயினும் சிற்சில நேரங் களில் மனங் கலங்குவ துண்டு. அவ்வாறு கலக்கங் கொண் டால், காரியங் கெடுவதுடன், பகைவரும் பரிகசிப்பதாம். மேற்கொண்டவற்றின் தடுமாற்றத்தால் வாழ்க்கையே தாழ் நிலை யடையும். ஆகையால் மனங் கலங்கா திருத்தல் யாவர்க்கும் வேண்டப்படுவ தாய ஓ ரரிய தன்மை யாகும். எடுத்த காரியம் அழிவு பெறுத லாலே தாமே இறந்து பட்டோர் பலர் ஆவர். இவர்கள் மன ஆற்ற லற்று மனங் கலங்கியவரே ஆவர் என்பது திண்ணம். இவற்றை யெல் லாம் ஆய்ந் துணர்ந்த 'வள்ளுவர்' முடிவும் இடையூறும் பயனும் பார்த்துச் செய்ய வேண்டும் என்றும்' வெள்ளத் தனைய இடும்பை யறிவுடையான், உள்ளத்தி னுள்ளக் கெடும்' என்றுங் கூறுகிறுர். ஆகவே ஒவ்வொருவரும் மனங் கலங்கா திருத்தல் வேண்டும். பெரும்பாலும் வறுமை, மெய்வருத்தம், ஊழ்வினை ஆகிய இவை மனத்தைக் கலக் குந் தன்மையன வாம். இவற்ருலும் மனத் தளர்ச்சி எய்தா திருத்தலே மேன்மை யாகும். மேற் கூறியவை கலங்கச் செய்யுமிடத்து மனங் கலங்கா திருத்தல் எவ்வாறு இயலும் என்ற ஐயம் எழும். அதற்கு 'வள்ளுவர்' மனங் கலங்கா திருத்தலோடு எடுத்த காரியத்தை இடையூறு இன்றி இனிது முடிக்கலாம் என விடை பகர்வார் போன்று

விளக்கியுள்ளார். துன்பம் உண்டான இடத்தில் மனங் கலங்காமல் உண் மகிழ்ச்சி யடைக. அவ் வுள்ள மகிழ்ச்சி யாகிய மன எழுச்சியால் உண்டான இடுக்கண் நீங்குவதோடு எடுத்துக் கொண்ட காரியமும் முடிய ஏது வாகும். இதனை 'இடுக்கண் வருங்கால் நகுக அதனை, அடுத்தூர்வது அஃதுஒப்ப தில்' என்ற நன்மொழியால் நவின்றுள்ளார்.

இன்னும் இன்னுமை (துன்பம்) வருதல் இயல்பு. எனினும் துன்பத்தையே இன்பமாக மாற்றி மனத்தில் எண்ணினுல் எடுத்த காரியம் இனிது முடிவதுடன் பகைவரும் விரும்பக் கூடிய சிறப் புண்டாகும் என்னும் உயர் வழியைப் பின்பற்ற உதவி செய்துள்ளார்.

ஆகவே, ஒவ்வொருவரும் மனங் கலங்கா திருப்ப தோடு துன்பத்தையே இன்பமாகக் கருதி வாழக் கற்றுக் கொள்ளின் வாழ்விலே முடியாத காரியம் இராது என்பதே போந்த பொருளாகக் கொள்க.

இவ் விடுக்கண் உற்றுல் இயல் பென்று சொல்லுந் தன்மை, ஆட்சி புரியும் மக்களுக்கும் பலரைச் சேர்த்து ஒன்றுபடுத்தும் உத்தமருக்கும் பலரிடம் பழகும் அலுவலகத்தார்க்கும் மிகவும் வேண்டப்படுவ தொன்றுகும்.

# குரவைக் கூத்து.

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B. A., B. L., தஞ்சை.

முக் குணப் போராட்டத்தை யுடைய வாழ்வே வினை யின் கூத்து. வாழ் வாகிய பெரு நாடகத்தை நடத்துவிப் பவன் சிற்றம்பல மாணிக்கக் கூத்த னுதலான், இத் தகைய வாழ்வை இறை யின்ப ஊற் றாக்குவது கூத்தின் கருப் பொருளாகும். உயிர் இறையுடன் ஒன்றுற்றுப்படுத்தி நிற்கும் நிலையின் மனக் கிளர்ச்சியினை எடுத்துக்காட்ட வல்லது கூத்துக்களே. இதன் ஆழ்ந்த பயனை முதற் கண் ணறிந்த தமிழ் மக்கள் கூத்தின் வகைகளையும் குறியையும் தூய நோக்குடன் நயமுற வளர்த்துத் தமிழக நாகரீகத்தை, அறிவும், அன்பும், அருளும் ஆண்மையும் பொலிய மேம் படுத்தினர். பழங்காலத்தே கூத்துப் பெற்றிருந்த செம்மை யினுனே தமிழகம் கலை யழகுச் செல்வி யாய் விளங்கிற் றென்பது அறியற் பாற்று.

மக்களது உள்ளமும் வாழ்வும் இறைவனது விளைநில மாதலான், உயி ரின்பமும் உயிர் நிறைவும் கூத்தே யென்ற மனப் பான்மை தமிழ் மக்க ளுள்ளத்தில் எக்காலத்தில் துவங்கிற் றென்பது அறிதல் இயலாததினுன், இதன் பழைமையைக் கால வரையறைக் குட்படுத்திக் கூறமுடி யாது போயிற்று. எனினும், அருந்தமிழ்க் குரவராம் கடவுட் புலமையாளர் இளங்கோவடிகளால் சிலப்பதிகாரம் இயற்றப்பட்ட காலம் வரை, கூத்து, அழகும் அணியும் பூத்து வளர்ந்துவர, பின்னர்த் தமிழ் இன்பக் கலை வளத் தைப் பெருக்கும் தமி ழருளாள ரின்மையான், பௌத்த, சமணத் துறவிகளால் தேய்ந்து குன்றுவ தாயிற்று. மக்க ளுள்ளத்திற் சிற்றின்பம் பயப்பதற்கு உறு துணையாவது கூத் தெனவே அன்னுர் ஐயுற்றதினுன், அது தீ தெனக் கடியப்பட்டது. கூத்து, அரு ளழகை நாடித், தூய நோக் குடன் புல் லியற் பொருளைத் தாண்டி, இறைவன் சிந்தனை யாம் கவிதையில் தவழ்ந்து, மக்களுக்குப் புலன்கள் வழியே அறிவைப் புகட்டி, அன்பினை விதைத்து, இறைவன்பால்

இன்பங் கனியச் செய்யும் தகைமை யுடைய தென்று தமிழர் உணர்ந்த உண்மையைப் பௌத்த சமணத் துறவிகள் ஒரு சிறிதும் ஓரார். எனவே, கூத்திற்கு உயிர் போன்று இன்றியமையாதன வாகிய அருள், அழகு, அன்பு, அறிவு, இன்பம், புலமை, ஆண்மை ஆகிய இவைகள் புறக்கணிக் கப் பெற்றுச், சிறுமை யுற்றுள்ளது. இதனுன் அஞ் ஞான்றே கூத்து நூல்கள் யாவும் அழிந் தொழிந்தமை யான், இன்று கூத் தென்பது வியப்புச் செயல் என்ற பொருளில் கருதப்பட்டு வருகின்றது.

பண்டு கடவுட் கலையாக விளங்கிய கூத்தின் நுண்ணிய தாய்ச் சிறந்த இயல்பு யாவும் இஞ்ஞான் றுணர்தற் கேலா தாயினும், முத் தமிழ்க் காப்பிய மாகிய சிலப்பதிகாரத்தி லுள்ள சில பகுதிகள் மூலம் சிறிது உணர்தற் கிட னுகின் றது. இப் பகுதிகள் கூத்தின் தோற்றம், தொன்மை, வளர்ச்சியென்ற இவற்றை ஆய்ந் துணர அருந்துணையா யிருப்பதினுன், இறை யின்பம், காதலின்பம், விறலின்பம் ஆகிய இன்ப வகைகளை எடுத்துக் காட்டி இன்பந்தரத் தக்க கூத்தி னியல் புணர்ந்த எங்நாட்டு மக்கட்கும் அதனைக் கற்றுணர வேண்டு மென்ற ஆர்வமும், கண் ணெனக் காக் கும் விருப்பமும் உண்டாகாம லிரா.

புகழ்ச்சியும், நகையும், அற்புதமும் தோன்றும் பல் வகைக் கூத்துக்கள் பண்டைநாளில் வழங்கினும், அவை யாவும் அகமும் புறமுமாகிய இரு வகைப் பாகு படுதலில் அடங்கும். கூத்துக்களை, வசைக் கூத்து, புகழ்க் கூத்து; வரிக் கூத்து, வரிச் சாந்திக் கூத்து; சாந்திக் கூத்து; விநோதக்கூத்து; இயல்புக் கூத்து, தேசிக் கூத்து என இரண் டிரண்டு வகைக ளாகத் தமிழகச் சான்றோர் பாகு படுத்திப் புல னுக வைத்தாலும், அவை செந்தமிழ் நிலத் தில் திணை வளன் தழீஇய திணைப் பாகுபாடுகள் மூலம், முல்லை சார்ந்து ஆய்சசியர் குரவையும், குறிஞ்சி சார்ந்து குன்றக் குரவையும், நெய்தல் சார்ந்து கானல் வரியும், பாலை சார்ந்து வேட்டுவ வரியும், மருதஞ் சார்ந்து ஊர்சூழ் வரி யும் நிகழ்ந்தன வாக அறியக் கிடக்கின்றன. மற்றும், நானில மக்களல்லாது விறல் வேந்தர்களும் வெற்றிக் கலப் பினுன் தேர்த்தட்டில் நின்று போர்த் தலைவரோடு கை பிணைந்து முன்றேர்க் குரவை ஆடுவ ரென்பதூஉம்,

வென்று களங் கொண்ட வேந்தன் சென்ற தேரின் பின் அவன் தானை மறவரும் விறலியரும் அவனது புகழைப் பாடுதல் மூலம் அவனை வாழ்த்திக் குரவையயர்த லென்ப தூஉம்,

* * * * தேரோர்.
வென்ற கோமான் முன்றேர்க் குரவையு
மொன்றிய மரபிற் பின்றேர்க் குரவையும்

எனத் தொல்காப்பியத்தால் புலனாகின்றன. (தொல்.— பொருள், 76).

கோட்டு மாப் பூட்டி வாட்கோ லாக
வாளழி வாங்கி அதரி திரித்த
வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தி
* * * *
தேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன் தேர்க் குரவை முதல்வனை வாழ்த்தி

என்பதூஉம் சிலப்பதிகாரம்.

இனிக் குரவையும் வரியும் யாவை யென அறியற் பாற்று. குரவை யென்பது காமமும் வென்றியும் பொரு ளாகத் தலைவன் மீது இசைவகையுடன் நகைச்சுவை ததும் பும் குரவைச் செய்யுள் பாட்டாக, ஏழு முதல் ஒன்பது மங்கைமார்கள் கற்கடகக் கைபிணைந்து சுழன்றாடும் கூத்து. இது, விநோதக் கூத்து எழு வகையுள் ஒன்றாகும். இத னியல்பை,

'குரவை யென்பது கூறுங் காலைச்
செய்தோர் செய்த காமமும் விறலு
மெய்தக் கூறு மியல்பிற் றென்ப'
(சிலம்பு.—மேற்கோள்)
* * * * *
குரவை யென்ப தெழுவர் மங்கையர்
செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்
தந்நிலை கொட்ப நின்றாடலாகும்
(சிலம்பு—மேற்கோள்)

என்பதனானு மறிக.

வரியின் இயல்பினை, 'வரி யெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனுஞ் சிறந்த தொழிலும் அறியக் கூறி

யாற்றுழி வழங்கல்' என்பதினு னுமறியப்படும். பெரும் பாலும் வேற் றுரு தாங்கி, வீரந் தளிர்த்து, அன்பின் ஆர் வத்தால் ஊடல் கூடல், மகிழ்ச்சி, காட்சி முதலானவற்றை கிளர்ச்சி பட புலப்படுத்தி ஆடல், வரிக்கூத் தாகும். எனவே, குரவையும் வரியும் கடவு ளின்பம், காதலின்பம் வீரத்தா லெழுந்த வெற்றியின்பம் முதலிய இன்பக் கிளர்ச்சிகளை இயல்பாக எழுப்பும் தன்மை வாய்ந்துள்ளன.

குரவை யயர்தல், முல்லை நில மக்களுக்கும் குறிஞ்சி நில மக்களுக்கும் உரித்தாயினும், மதுரையின் மருத வளத் தைக் கூறவந்த மாங்குடி மருதனர் எனும் அரும் புலவர், 'மன்று தோறும் நின்ற குரவை' (மதுரைக் காஞ்சி) என்றதி னாலும், மறுவில் வாய்மொழி மாங்குடி கிழார், 'திண்டி மில் வன்பரதவர் வெப்புடைய மட் டுண்டு தண்குரவைச் சீர் தூங்குந்து' (புறம்—24) என்றதினாலும், மருதம் நெய்தலாகிய இரு நிலத்து மக்களும் குரவையாடும் செய்தி புலனாகின்றது.

குரவைக் கூத்து, கூத்துப் பொட்டலிலும் தாதெரு மன்றத்திலும் (தாதெரு மன்றத்தாடுங் குரவையோ தக வுடைத்தே—சிலம்பு) மற்றும் பரந்துபட்ட செதுக் குடை வேங்கை மூன்றிலும் (புறம்) நிகழ்ந்ததாக குறிக்கப்படு கின்றது. மற்றும், குரவை யாடுமிடம், முனிபுங்கவர் கூடும் பள்ளிகளும், புள்ளினங்கள் சேக்கையும், பாம்பு தங்கும் புற்றுகளும் நீக்கிப், போர்க் களி யானைகளும், புரவிகளும் கட்டும் கூடங்கள் சாராமல், நுட்ப மான மண் செறிந்த திட்ப மான நிலப் பான்மை வாய்ந்த இடத்தின் கண் பொருந்தி யிருத்தல் வேண்டும். எனவே, குரவைக் கூத்து, இத்தகைய குற்ற மில்லாது நற்றம் வாய்ந்த இடத்தில் அமைக்கப்பட்ட ஊர்ப் பொது மன்றத்திலும், கூத்தப் பள்ளியிலும், கூத்தம்பலத்திலும், கூத்துக் களரியிலும் நிகழவேண்டு மென்பது தமிழகத்து இயற்கைத் தத்துவ நூற் சித்தாந்த மென அறிக. ஓசை எங்கணும் பரவும், தரங்க முடையததனுன், அத னெல்லையினைத் துருவி வரை யறுத்து, தனி மணி அரங்கு அமைக்கும் திறன் பண்டைத் தமிழர் பெற்றிருந்த உண்மை ஈண் டறியற்பாற்று.

குரவைக் கூத்தினைப் பெரும்பான்மையாகக் குன்றில் வாழும் வேட்டுவரும் வேட்டுவித்தியரும் தங்கள் மனம் இறை யன்பு மேலீட்டால் மாசற்ற வெறி பிடித்து வியப் புற்ற காலத்தே நிகழ்த்துவார்கள். மற்றும், தாம் வதியும் பெரு மலையில் வற்ருத வளஞ் சுரக்கப் பூப் பலி செய்யுங் காலத்தும், குன்றக் குரவை யாடுவர். இக் கூத்தில் இறை வணக்கம் விரவிய அகப் பொருட் சுவை மிக மலிந்திருக் கும். இறுதியில், குன்றர் முழங்குங் குரவை, மன்னனை வாழ்த்திக் காவன் முல்லையில் முடிவெய்தும்.

முல்லை நில மகளிர் ஏறு தழுவுதற்குரிய நாள் அல்லது அதற்கு முன் ஞள் மாலையிலும் ஏறுதழுவுதல் நிமித்தமாகக் குரவைக் கூத் தயர்தல் வழக்கமென முல்லைக் கலிப்பாக்க ளான் நன்கறியப்படும். மற்றும், பின் வருவதோர் துன்பங் களைச் சில தீக் குறிகளான் முன் னறிந்து, அவைகளைத் தீர்க்கும் கழுவாயும் தேட வேண்டிக் கண்ணனைக் குறித் துக் குரவை யாடுதல் முல்லை நில மக்களுக்கு வழக்கமென் பதூஉம் சிலப்பதிகாரத்தால் புலனும். இவ்வாறு மகளிர் குரவை பாடி யாடி மகிழ்ந்த பின்னர் இறுதியில் இறை வனையும் மன்னனையும் போற்றி. ஆடல் முடிப்பது அன்ன வருக்கு சிறப்புடைய மர பாகும்.

இனி குரவைக் கூத்தினைப்பற்றிச் சிலப்பதிகாரத்து, ஆய்ச்சியர் குரவையில் கூறப்பட்டிருப்பதைத் துலக்குவாம். ஆயர் பாடியில் முன்னர்க் கண்ணன் பலராமனுடன் ஆடிய பால சரிதை நாடகங்களில் ஒன்ருகிய கண்ணன் நப்பின்னை யாருடன் ஆடிய குரவையே கண்ணகி முன் னிலையில் மாதரி, அன்னவள் மகள் ஐயை முதலிய ஆய்ச்சியர்களால் ஆடப்பட்டது. முதற்கண் இனிய குரலமைந்த கோவித்தியர் எழுவர் நப்பின்னையின் தோழிய ராகக் கருதிக் கொண்டு தாம் வளர்த்த (1) காரி எருது (2) நெற்றிக் கண் சிவந்த சுட்டி கட்டிய எருது. (3) வலிய மழவிடை. (4) நுண் பொறி வெள்ளை. (5) பொன் பொறி வெள்ளை. (6) வெற்றி மழவிடை. (7) தூ நிற வெள்ளை என்ற எழுவகை ஏறுகளைத் தழுவிப் பிடித்த வீரனும் கண்ணனுக்கு நப்பின் னையார் உரியள் என்று கூறிக் கண்ணன் மணந்த முறை

யினைப் பாடுவார்கள். எழுவரும் உயிருக்குயிரான இன்பத் திளின் றெழும் நாத ஊற்றாகிய ஏழிசைகளு மாவார். அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி தார மென வழங்கப்படும். ஏழிசைகளுள், குரல் மிடற்றி லிருந்தும், துத்தம் நாவிலிருந்தும், கைக்கிளை அண்ணத்தி லிருந்தும், உழை தலையி லிருந்தும், இளி நெற்றியி லிருந்தும், விளரி நெஞ்சி லிருந்தும், தாரம் மூக்கி லிருந்தும் பிறக்கு மென்பதை ஈண்டு ஓர்ந்திடல் வேண்டும். நப்பின்னை என்ற உயிராகிய தலைவியை, இசையும் இசைப் பயனுமான கண்ணனுக்குக் காட்டியும், உறுவித்தும் பேரின்பமடையச் செய்வதே ஏழிசைக ளாகிய தோழியர் குறிப் பென அறிக. தத்துவக் கண் கொண்டு நோக்கின், தோழியர் எழுவரும் அமைதி தரத் தக்க ஏழு நிலையினைக் காட்டா நிற்கும். மற்றும், ஏழு சுர முடைய இராகம் பேராற்ற லுடைய இறைவனது பேரறி வுத் திறத்தை இன்னிசை யூற்றினால் போற்றி இன்புறு கிறதை இக் குறிப்பு உணர்த்துவது மிகு நயம்பட்டதாகும்.

பின்னர், ஏழிசைகளையும் குறிக்கும் ஏழு தகவுடைய ஆய்ச்சியர்கள் வட்டமாக நின்று, குரல் கண்ணன், துத்தம் நப்பின்னை, இளி பலராமன், தாரம் யசோதை எனக்குறித் துக் கண்ணனாகி நின்ற ஆய்ச்சியருக்குத் துழாய் மாலை மற் றையோர் சூட்டுவர். பின்னர் அவர்கள் நடுவிரலும் ஆணி விரலும் கோத்து நின்று குழகாக குலாவோடு பின் வருவன போன்று பாடி ஆடுவார்கள். 'கண்ணனாகி நின்றவள் நப் பின்னையை நோக்கி,

> 'கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தார்ப் பாடும்
> முல்லைத் தீம்பாணி யென்றாள்.'

கண்ணன், ஆவின் கன்றினைக் குணிலாகக் கொண்டு, விளாவின் கனியை உதிர்த்தான்; பாம்பு கயிறாகப் பாற் கடலைக் கடைந்தான்; கொல்லையைச் சார்ந்த குருந்த மரத் தினை முறித்தான். அவன் நம்மிடையே வருவா னாயின் முல்லைத் தீங்குழல் கேட்போம்.

கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்று நம்மானுள் வருமேல், அவன் வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளோமோ தோழி!

பிறகு யமுனைத் துறையில் கோபியர் புடவையை ஒளித்த மாயவனது திருவிளையாடலைப் பாடுவர். இதுபோது, பின்னை, தானென்ப தற்று, நெஞ்சங் கவர்ந்து, வஞ்சம் புரிந்த மாயன் அழகை யோர்ந்து, கடவுட் காதலிற் படிகின்றுள். உயிர், வல்லாள் வகுத்த அன்பெனு மாற்றில் மூழ்கி ஆசை யாணவ மாயங்களை நீக்கி, உயிர்க் கணவனாகிய இறைவனைக் கண்டு, அடக்க முற்றுப் பின் காதலாகியும், கருத் தழிந்தும், கலந்து இன்புறும் ஞானக் கூத்தினை இத் திருவிளையாடல் குறிக்குமென்பது உணர்ந்து கொள்க*. பின்னர், 'மாமணி வண்ணனுந் தம்முறும் பிஞ்ஞையும் ஆடிய குரவை யிஃதா மெனக்' கூறலும், எழுவரும் கண்ணனை முன்னிலைப் படுத்தி, பலவாறு புகழ்ந்து வாயார வாழ்த்துவார்கள். இவர்கள் பாடியதாகக் கூறப்படும் பாடல்களில் கழிபெரும் பொருளும், அப் பொருளுக் கிசைய எடுத்தாளப் பெற்றிருக்கும் சொற்களிலும் ஒலியும் மெல்லியலும் அழகாக அமைந்து கிடத்தலினால், அவைகளின் அழகினை இம்மியும் விடாது பருக அப்படியே எடுத்துரைப்பாம்.

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே!
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே! [க]

---

*The Gopis, covered with garments of ignorance and egoism – our mental aspirations – are bathing in the river of Love and seek to approach the soul–Krishna. The soul–Krishna–rejects their offer unless they approach Him free from all egoistic feelings and surrender themselves absolutely to Him. Love – Absolute can be gained by self – surrender. It is only, when all separate consciousness is lost, a man reaches the final beatitude.

அறு பொரு ளிவனென்றே அமரர்கணந் தொழுதேத்த
உறுபசியொன் றின்றியே யுலகடைய உண்டனையே
உண்டவாய் களவினால் உறிவெண்ணெ யுண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே ! [உ]

திரண்டமரர் தொழுதேத்துந் திருமால்நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய், மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே ! [ந]

இம் மூன்று பாடல்களுள்ளும் அமர்ந்து செல்லும் இசையும் கழிபெரும் பொருளும் அமிழ்தினு மினிய சுவை நலப் பேறுடைய சொற்களும் படிப்போர்தம் நெஞ்சுட் பதிப்பனவாயும், உள் ளாழ்ந்த உணர்ச்சியை எழுப்பி இன் புறச் செய்வனவாயும் நின்று கழிபே ருவகை அளிக்கும் பான்மைய.

இனி, மாயவன் சீர்கேட்டு, அதன் பெருமையில் மக் களை விழிப் புறுத்தி, இன்புறுத்தும் அன்னார் பாடியதாகக் கூறப்படும் அரிய பாடல்கள் உள்ளத்தை உருக்கும் தன்மை வாய்ந்து, இசைச் சுவையிலும் இனிமை பயப் பனவாயு மிருக்கின்றன. அத் தகைய அருட் டிருப் பாக்க ளாவன :

மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான் போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கைக் கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே !
திருமால்சீர் கேளாத செவி யென்ன செவியே ! [க]

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியிடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுந் திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே !
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே ! [உ]

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனர் வஞ்சம்
கடந்தானை, நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே!
நாராயணா வென்னு நாவென்ன நாவே.! [௩.]

இப் பாடல்களில் பொதிந்துள்ள இனிய சொற் சுவையும், பொருட் சுவையும், நயங்களும் மிகப் பாராட்டற் பாலன தாம். மற்றும் இப் பாக்களில் படிந்து செல்லும் ஓசையொழுக்கு பொருட்கேற்ற பெற்றியில் நலம் நிரம்பி செவிக் கமுதமாகச் சிறப்புறுகின்றது.

படர்க்கைப் பரவலாக மாயவனைப்பாடிய தாகப் பாடப் பட்ட பாட்டுகளிலிருந்து குரவைக் கூத்தின் ஆழ்ந்த பயனைக் காணலாம். வினையுடல் தாங்கிய ஒவ்வோருயிரும் உலக அரங்கில் நடிக்கும் கூத்து அம் மாயவனில் முடியும். எனவே, இறைவனுடன் உயிரை இணைப்பது தான் வாழ் வின் சீரிய குறிக்கோள். அதனானே அவனைப் பரவிப் பணி தல் சாலச் சிறந்த தென்பது குறிப்பா னுணர்த்தப் பட்டது காண்க. உயிர் நிலை உடம் பாதலான், அவ் வுடம்பின் புலன்கள் மூலம் வரும் இன்பங்களை உயிர் நுகர்வதினால், புலன்கள் பார்த்துப் பார்த்து அல்லதை நீக்கி, நல்லதைக் கொண்டு, உயிர்க்குத் தூய வாழ்வையும், தூய உணர்வையும் அளிக்க வேண்டு மென்றும் அதனான் செவிகள் பதியுடைய ராகிய இறைவனது சீரினைக் கேட்க வேண்டுமென்றும், கண்கள் அவனையே காணவேண்டு மென்றும், நா அவனையே வழுத்த வேண்டுமென்றும், மற்றும் இஃதே இன்ப மெனவும், இத் தகைய இன்பத்தோ டிசைந்த வாழ்வை அளிப்பது குரவைக் கூத்தே யென்பது தெள்ளி திற் புலனாகின்றது.

---

## தமிழ் நாட்டில் தமிழரால் தமிழருக்காக ; தமிழிலே வெளியிடும் தாள்களின் பதிப்பாசிரியர்களுக்கு

# ஒரு வேண்டுகோள்.

திரு. கோ. தியாகராசன், G. M. V. C., தெற்கலங்கம், தஞ்சை.

தமிழுக்கும், தமிழருக்கும், தமிழ் நாட்டிற்கும் பயன்படுவனவாகப் பொருத்தமாகவும், தெளிவாகவும், எளிய நடையிலும், எழுதப்பட்ட கட்டுரைகளைப் பல தமிழ்த் தாள்கள் ஒரே காலத்தில் வெளியிடுமாயின், அக் கட்டுரைகளைத் தமிழ் மக்கள் பலரும் படித்து, உணர்ச்சியும், விளக்கமும், ஊக்கமும் பெற்று, ஆவதற்கான வழிகளைத் தழுவுவது எளிதாகும். பல தாள்கள் வெளியிடும் ஒரே கட்டுரைக்கு 'Syndicated news' or 'Syndicated feature.' என்பர் மேல் நாட்டார். எடுத்துக் காட்டாக, வடமொழியைக் (Samskrit) கட்டாய பாட மாக்க வேண்டு மெனுங் கருத்துடையார் கிளர்ச்சி செய்கின்றனர். இந் தக் கிளர்ச்சியை முளையிலேயே அகற்றவேண்டும். எனவே, இத் துறையில் மேற் கூறியபடி எழுதப்பட்ட கட்டுரைகளைப் பல கிழமைத் தாள்கள் வெளியிடுமாயின், அக் கட்டுரைகளில் குறிக்கப்பட்ட கருத்துக்கள் முதலியன மக்களிடையே மிகப் பரவிச் இச் சார்புடையார் வேண்டா முயற்சியை நீக்குவதற் கான வழிகளை ஒற்றுமையுடனும் திறமையுடனும் செய்வது எளி தாகும். ஆகையால், இக் கருத்தைத் தாங்கள் நன்கு கூர்ந்து பார்த்து, ஏற்றதாயின் தங்கள் நண்பர்களுக்கும் கிழ மைத்தாள் பதிப்பாசிரியர்கள் பலருக்கும் எழுதி, இக் கருத்தை ஏற்கும்படிக் கேட்டுக் கொள்ளுமாறு வேண்டுகிறேன். இன் னும், இக் கருத்தைப் பதிப்பாளர் பலர் ஏற்பாராறுல், அவர்கள் தங்கட்குள்ளே சில அறிவாளிகளைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக் குக் கட்டுரைகளை அனுப்பி, அவர்கள் திருத்தியும் கூட்டியும் ஏற்கும் கட்டுரைகளையே எல்லோரும் வெளியிடுவதென ஒப்புக் கொள்ளல் வேண்டும். இதற்காகக் கிழமைத் தாள்களின் பதிப் பாளர்களின் கூட்டம் ஒன்று கூடி, இக் கருத்தைப் பல வகை யிலும் ஆராய்ந்து ஆவன செய்யுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

# நன்கொடை.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பாகச் சங்கத் தலைவர் முத்தமிழ் வள்ளல் இராவு பகதூர் திருவாளர் ஆ. யா. அருளானந்தசாமி நாடார் அவர்கள் செய்து கொண்டிருக்கும் விண்ணப்பமும் வேண்டுகோளும் இந்தப் பொழிலில் வெளிவந்துள்ளன. இவற்றைப் பரிந் தேற்றுச் செந்தமிழ்ச் செல்வர்கள் மகிழ்ந் துதவும் தொகைகளுக்குத் தனித்தனியே பற்றுச்சீட்டு அனுப்பப்பெறுவதுடன், பொழிலிலும் அவ்வப்போது விவரம் வெளியிடப் பெறும்.

நம் கரந்தைப் புலவர் கல்லூரி மாணவர் ஒருவர் உணவுக்கு ஒரு பகுதியாகத் திருவாரூர்ப் பெருஞ்செல்வர் T. N. சபாபதி முதலியார் அவர்கள் அறுபது வெண் பொன் உதவினூர்கள். வீரத் தமிழ் மகனூர் நாகப்பட்டினம் திருவாளர் V. P. K. காயாரோகணம் பிள்ளை அவர்கள் முதற் றவணையாக இருநூற்றைம்பது வெண் பொன்னும், தலைவர் அவர்கள் வேண்டுகோள் கண்டு மனங் கனிந்த பெருந் திருவினர்க ளாகிய நாகப்பட்டினம் திருவாளர் இரத்தின. பச்சமுத்து நாடார் அவர்களும், திருவாரூர் திருவாளர் V. S. T. தியாகராய முதலியார் அவர்களும் ஒவ்வோ ராயிரம் வெண்பொன்னும் உதவியருளியுள் ளார்கள். ஆகவே, இத்திங்கள் இதுகாறும் சேர்ந்துள்ள தொகை 2,310 வெண்பொன் ஞகும்.

மேலே குறிப்பிடப்பெற் றுள்ள வள்ளல்களுக் கெல் லாம் நம் சங்கத்தின் நன்றி உரித்தாகும். அளவிலாச் செந் தமிழ்ச் செல்வர்களுடைய அன்புக் கொடையை மேலும் மேலும் எதிர் நோக்கியுள்ளோம்.

பொழிற் ஞெண்டர்.

உ

## கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

### நிலையிருப்புக் காட்சி.

(யோக ஆசனம்.)

சர்வதாரி, ஆடி, 29 வெள்ளி, பிற்பகல் 5 மணிக்குமேல் இச்சங்கத்து அன்பரும் தொண்டருமாகிய புலவர் செங் கரையூர் திரு. அ. பொன்னண்ணுக் களத்தில்வென்ருர் அவர்கள், சங்க ஆசியர்கள், மாணவர்கள், சங்க எழுத் தாளர், சங்க அமைச்சர் முதலியோர் கூடிய கூட்டத்தில், அரிய நிலையிருப்புக் காட்சிகள் பல செய்து காட்டினர். புலவர் அவர்களது நாள் நிகழ்ச்சிகளின் அருமைகள், இத் தமிழ் நாட்டில் பற்பல இடங்களிலுள்ள அவர்தம் அன் பர்கள் அறிந்து வியந்து மகிழ்ந்து வருவன. அவற்றுள் ஒன்ருகிய இந்த இருப்பு நிலைகளை, அவர்கள் இக்கூட்டத்தே முன் விளக்கம், பின் விளக்கம் ஆய உரைகளுடன் நிகழ்த் திக் காட்டினர். திருவள்ளுவரால் பெரியாரது செயற் கரும் செயல்களாகப் பாராட்டப் பெற்ற இயமம், நியமம், ஆதனம் முதலாய யோக உறுப்புகளில் ஒன்ருய இந்த ஆதன நிலைக் காட்சியினைக் காட்டி யருளும் இப்பெரியா ரது நோக்கம், இத்தகைய பயிற்சிகளை, ஒவ்வொருவரும் பயின்று உடல் நலம், உளநலங்களை எய்தவேண்டு மென்ப தாகலின், இத்தமிழுலகம், அவர்தம் பெருமையினை அறிந்து போற்றி, அவர்கள் விருப்பின் வழி நடந்து பயன் எய் தலைக் அவர்கட்குக் காட்டி மகிழ்விப்பதாக, இத்தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு கழகத்திலும், மேனிலைப் பள்ளி களிலும், இவை போன்றவற்றிலும் கூட்டங்கள் கூட்டி, இப் பெரியாரை வரவேற்றுக், காட்சிகள் எய்துவித்து, பயன் எய்துவார்களாக. இப்பெரியார்க்கு இச்சங்கத்தின் உரிமை வாழ்த்து உரியதாகும்.

**பொழிற் ருெண்டர்.**